கழக வெளியீடு : கஉகக

உ

திருச்சிற்றம்பலம்

# கண்ணப்ப சுவாமிகள்

## சரித்திரக்கீர்த்தனம்

●

சேலம் நகராண்மைக் கழகக்கல்லூரித்
தமிழ்ப்பேராசிரியராயிருந்த
கவிஞர் சா சரவணப்பிள்ளை அவர்கள்
இயற்றியது

●

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி -6 சென்னை -1
1967

சா சரவணப்பிள்ளை





Ed 1 May 1967




KANNAPPA SWAMIKAL
CHARITHIRAKKEERTHANAM

Appar Achakam, Madras-1.

# பதிப்புரை

இயல், இசை, நாடகம் எனப்படும் மூன்றும் முறையே உயிர், உள்ளம், உடல் போன்ற ஒற்றுமையுடையனவாகும். நடுவாகக் காணப்படும் இசையும் பொது சிறப்பு என இரு வகைப்படும். பொது என்பது பண்பாடும் பாமுறையாகும். சிறப் பென்பது பண்ணெடு பாடியாடப் பயன்பெறு முறையில் எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்னும் உறுப்புக்களோடுகூடிய வரிப்பாட் டெனப்படும் கீர்த்தனங்களாம்.

இம்முறையில் கீர்த்தனங்கள் பெரும்பாலும் நாடகச்சார் புடையன. நாடகம் கண்ணுக்குக் களிப்பும், செவிக்கினிமையும், கருத்துக்கு விருந்தும், உணர்வுக்கு உறுதியும் ஒருங்களிக்கும் உயர்வுடையதாகும்.

தென்றமிழ் நாட்டு மெய் வரலாறும், நாகரிகப்பண்பாடும், திருத்தொண்டர்தம் செயற்கருஞ் செயலும் ஒருங்கு காணக் கிடக்கும் தனித்தமிழ் மாமறை "திருத்தொண்டர் சீர்" எனப்படும் பெரிய புராணம் ஆகும். திருமுறைகள் பதினொன்றும் சிவ பெருமான் திருமுகம் ஐந்தும் திருவுறுப்பு ஆறும் போன்றன என்ப. பன்னிரண்டாவதாகத் திகழும் பெரிய புராணம் ஒப்பில் திருவடியுஞ் சேர்ந்த உறுப்பியாம் திருமேனியாகும்.

இதன்கண் தனியடியார் அறுபான் மும்மையராவர். தொகையடியார் ஒன்பதின்மர். ஆக எழுபத்திருவர் திருவர லாறுகளுள் "கண்ணப்பநாயனர்" திருவரலாறு தனிச்சிறப்பு வாய்ந்த தாகும். சிவபெருமானுக்குரிய அன்பு, அறிவு, ஆள்வினை எனப் படும் இச்சாஞானக்கிரியைகளின் திருக்குறிப்பாக முறையே கண்ணப்பர், ஞானசம்பந்தர், நாவுக்கரசர் மூவருந் திருவருளால் அமைந்துள்ளனர்.

திருவடிப்பேறெய்திய அகவை கண்ணப்பர்க்கும், ஞான சம்பந்தர்க்கும் பதினறு, பதின்று எனப்படுகின்றது. அம் முறையின் நாவுக்கரசருக்கும் அவர்பின் சைவசமயம் வந்து தொண்டு புரிந்தருளிய காலம் பதினறெனக் கோடலும் அமையும் போலும்.

(கண்ணப்பர் "அன்பு பிழம்பாய்த்திரிந்த" அருந்தவத்தவர். ஞான சம்பந்தர் "ஞானத்தின் திருவுரு"வானவர். நாவுக்கரசர் "கைத் தொண்டாகும் படிமையர்" கண்ணப்பர் மாயையின் காரியமாம் ஐம்புலவேடரினின்று விடுபட்டவர். ஞானசம்பந்தர் அருளால் எடுத்தாளப்பட்டவர். நாவுக்கரசர் இருவினை விடுபட்டு இறை பணி நின்றவர்.)

கண்ணப்பர் திருவரலாறு கதையாகக் கண்டு கேட்டுக் கருத்துக் கொண்டு களிப்பெய்துதற்கு நனிமிகப் பொருத்த முடையதாகும். அதனை இவ்வாசிரியர் அழகிய எளிய இனிய கீர்த்தனங்களாக அமைத்துள்ளனர். இவற்றுள் கீர்த்தனங்கள் இருபத்திரண்டு, கண்ணிகள் எழுபத் தேழு; ஆகத் தொண் ணூற்றென்பது செய்யுட்கள் காணப்படுகின்றன. ஆசிரிய ரவர்கள் வழிவழிச் சிவனடி பூண்டொழுகும் மரபினர். திருத் தொண்டர் புராணத்தை அடியொற்றி அழகுற அமைத்த அறிவாற்ற லமைந்தவர். இவர்தம் தந்தையாராம் சாமிநாதக் கவிராயரும் மிக்க தமிழ்ப்புலமை வாய்ந்தவர்.

இவ்வாசிரியர் சேலம் நகராண்மைக் கழகக் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர். நூல் தோன்றிய காரணமும் வரலாற்றிற் கூறப்பட்டுள்ளது. ஏறத்தாழ எழுபத்தாறு ஆண்டு களுக்குமுன் முதற் பதிப்பு (1891) வெளி வந்துள்ளது. "திரு நாவுக்கரசு நாயனர் கீர்த்தனமும்" இயற்றப்பட்டுள்ளதாகத் தெரிகின்றது. அதுவெளியிட்ட விபரம் விளங்கவில்லை.

கழகத்தார் பழம் புலவர்களையும், அவர்தம் நூல்களையும், உருவப்படங்களையும் பேணிக்காத்துவரும் குறிக்கோளினர். அம் முறையில் இந்நூல் வெளிவருகின்றது. நூலாசிரியர்க்குக் கழகத்தார் நன்றி உரித்தாகுக.

கண்ணப்பரைப்பற்றி நக்கீரதேவராலும், கல்லாட தேவ ராலும் "திருமறம்" பாடப்பட்ட இரண்டும், வேறுசிலர் பாடிய புகழ்ப் பாடல்களும் பிறவும் சேர்க்கப்பட்டுள்ளன.

செந்தமிழன்பர்களும் செந்நெறிச் செல்வர்களும் இதனைக் கற்று நன்மை எய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை





சிவமயம்

திருக்கைலாசப் பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து

அடியார் குழாத்துளொருவராகிய திருக்காளத்தி

# தொண்டர் சீர்பரவுவார் சுவாமிகள்

இயற்றிய சிறப்புக் கவிகள்.

---

சீராருஞ் சதுமறையு மான்முதற்புங்
கவரெவருந் தேடத்தேட
நேராதே யவர்சீவச் செயற்கொளிக்குங்
காளத்தி நிமலர்தம்பா
லாராத அன்புமிகுந் தாறுதினத்
தினிற்பெரும்பே றடைந்தசெல்வக்
காராரும் பொழிலுடுப்பூர்க் கண்ணப்பர்
சரித்திரத்தைக் கசியுமன்பால். (க)

சங்கமிகுங் குரவர்சிகா மணியெனுஞ்சுப்
பிரமணிய தயாளுங்கேட்டுப்
பொங்கமுறக் குதுகலிக்கப் பிரசங்க
மதுப்பொழியும் புகழ்சேர்கொண்மூ
தங்கமெனச் சொலுஞ்சாமி நாதவேள்
செய்தவத்துத் தநயனென
எங்கள்சர வணக்கவிஞன் கீர்த்தனமா
யறிஞர்கொள வியம்பினனால். (உ)

அன்னசரித் திரத்தையச்சிட் டனைவருக்கு
முபகரித்தா னவனுரென்னில்
மன்னர்மன்னர் புகழ்கங்கை வல்லிவையா
புரிமகிபன் மைந்தனியாருங்
கன்னனைப்பின் னெனுங் கொடையான்
கநகசபா பதிச்சுகுணன் கற்றோர்மெச்சு
நன்னயவா னிவன்புகழை யின்னுமவர்
தாம்புகழார் நாட்டின்மாதோ. (ந)

---

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்.

---

சென்னையைச் சார்ந்த - சூளை

சைவ சித்தாந்த சண்ட மாருதம்

## அருட்டிரு சோமசுந்தர நாயகரவர்கள்

இயற்றியது.

திங்களணி மணிமாடந் திகழ்தருசீர்க்
    காளத்திச் சிமய மேவுங்
கங்கையில கியசடிலக் கண்ணுதலெம்
    பரம்பரன்றுள் கருதி யன்பு
பொங்கியமூ விருநாளி லூனமுதிட்
    டரன்வலப்பாற் பொருந்தப் பெற்ற
துங்கமிகு தவத்தர்திருக் கண்ணப்பர்
    துகளறுநற் சரிதந் தன்னை. (க)

மலயமுனி வரனிசைத்த முத்தமிழி
    னிடையமர்ந்து மன்னு மேன்மை
நிலவுமிசைத் தமிழ்ப்பாவாற் புலவருளங்
    களிதூங்க நெடிதி னீந்தான்
இலகியவப் பெருந்தகையா ரெனினுமையாள்
    மயிலுருக்கொண் டெம்பி ரானை
நலமுறப்பூ சித்ததிரு மயிலாடு
    துறையினைத்தன் னகராக் கொண்டோன். (உ)

கம்பனியற் றியராமா யணக்கவியிற்
    புதைபொருளாய்க் கவினப் பெற்றுப்
பம்பியவுட் பொருளனைத்து முலகினுளோர்க்
    குபகரிக்கும் பரிசி னலக்
கம்பனிவ னேயெனச்சொல் சாமிநா
    தப்பெயர்கொள் கவிஞர் கோமான்
உம்பர்பிரான் றனைவழுத்துந் தவமேயோர்
    சுதனென்னு முருவங் கொண்டோன். (ங

விதுவணிசெஞ் சடைப்பெருமா னடிபரவா
தலைவுறுந்தீ வினையினேரை
இதுதகா தெனவிடித்தங் கறிவூட்டித்
தெளிவிக்கு மியற்கை வாய்ந்தோன்
பதிபசுபா சத்தினியல் பிதுவிதுவென்
றுளங்தெளிந்த பண்பினேங்கித்
துதிபெருக நிலவுலகிற் புகழ்விளக்கும்
பெருமையினுற் றுன்னி வாழ்வோன், (௪)

*கெண்டையழ கெனும்பொருளி னமைதிரிசொ
லுறுநகரிற் கிளர்வுற்றோங்கி
மண்டுபுகழ் முனிசிபல்கா லேஜிலெவர்
களும்வழுத்த மன்னி நாளுந்
தண்டருஞ்சீர்த் தமிழ்த்தலைமைப் புலமைநடத்
திடுங்கருணைத் தடங்குன் றன்னன்
பண்டயன்மாற் கரியபர னடிபரவுஞ்
சரவணப்பேர்ப் பாவலோனே. (௫)

———

* கெண்டை = சேல் } சேலம்.
அழகு = அம் }

சிவமயம்.

கோயமுத்தூர்க் கல்லூரித் தமிழ்ப்பண்டிதர்

கும்பகோணம் திருவாளர்

## ஆர். சபாபதிப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

நீர்பூத்த மதிமுடியா ரடியார்தம்
மனத்தகலா கிமலர் குன்றின்
வார்பூத்த முலைக்கொடிதன் னிடம்பூத்த
காளத்தி வரதர் பாதத்
தேர்பூத்த வன்பினருச் சித்தானை
யருத்திவிழி யிடந்து சாத்துஞ்
சீர்பூத்த கண்ணப்ப தேவர்திருப்
புராணமதைத் தெளிவி னோர்ந்தே. (க)

எந்நூலிற் றேர்ந்தவரு மமையுமென
விசைநூலி னிசைத்த வாறே
பன்னூலின் பொருள்களெலாம் விளங்கவெழிற்
கீர்த்தனமாப் பாடித் தந்தான்
றென்னூல்கள் பலவுணர்ந்தோன் தோலாத
பிரசங்கத் தொடர்பு பூண்டோன்
நன்னீர்மை மிகவுடையோன் விடையீசன்
றிருவடியே நாடு மேலோன். (உ)

மாமகளுக் கிடமாய சேலநகர்க்
கலைக்கல்வி வளர்சாலைக்கண்
நாமகள்மற் றிவனென்ன மாணவரைப்
பயிற்றுவிக்கு ஞான முள்ளோன்
தேமகல்சீர்ச் செய்யுள்புகல் சாமிநா
தக்கவிஞன் சேயாய் வந்தோன்
பூமகளிற் பொறையுடையோன் சரவணமென்
றுலகுரைக்கும் புலவ ரேறே. (ங)

———

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

---

# முகவுரை

பரமேதிகாசமாகிய சிவரகசியத்திலே உமாதேவியார்க்குச் சிவபெருமானால் உபதேசிக்கப்படும் பெருமை வாய்ந்த திருத்தொண்டர்களில் ஒருவராகிய இக்கண்ணப்ப சுவாமிகளுடைய திவ்ய சரித்திரமானது, ஸ்ரீ நடராஜ வள்ளலார் "உலகெலாம்" என்று முதலடி யெடுத்துக் கொடுத்தருள, ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் பாடிமுடித்தருளிய பெருங்காப்பியமாகிய பெரியபுராணத்திலே விரித்துரைக்கப்பட்டிருக்கின்றது. இத் தெய்வக்கதையி லன்புடைய மூதறிவாளர் பலர் இதனைக் கீர்த்தனம், நாடகம் முதலிய பலவகையாகச் செய்துள்ளார். சில நாளைக்குமுன் என் நண்பரொருவர் இச்சரித்திரத்தைப் பஜனரூபமாகச் சிரவணம் பண்ண விரும்பினர்; அப்போது சில சந்தர்ப்பங்களுக்கு மாத்திரம் சில கீர்த்தனங்களை அமைத்துக்கொண்டு நடத்தப்பட்டது. பின்பு சரித்திர முழுதும் பூர்த்தி செய்யப்பட்டது. "கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை* யென்றமையாற் கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக்-கண்ணப்பர்-தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற் - றாரறியு மன்பன் றது" என்று புகழ்ப்பெற்ற நம் கண்ணப்ப சுவாமிகள் பெருமையானது, 'சங்கரன்றாள் தமது சிரங்கொள் திருத்தொண்டர் புராணத்தை யளவிட நஞ்சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்குமரிதே' என்றபடி நம் அருண் மொழித் தேவரே யளந்துரைக்கும் பெற்றியதாக, அதனைச் சிற்றுணர்வுடையேன் புன்மொழி கொண்டு கூறப்புகுந்தது முற்றும் பொருந்தா

---

* திருக்களிற்றுப் படியார், ௫உ,
திருவாசகம், திருக் கோத்தும்பி - ௪.

தாயினும் அச் சேக்கிழார் பெருமான் 'அடியவர் திருப்புகழை யெவ்வாற்றானும் புனைந்துரைப்பதிற் றுணிவுபிறந் துலக முய்யு நெறி யெய்துக' என்னுங் கருத்தைப் புலப்படுத்தி, அவையடக்க வாயிலாக வருளிச் செய்த "இப்பொருட் கென்னுரை சிறிதாயினு-மெய்ப்பொருட் குரியார் கொள்வர் மேன்மையால்" என்னும் அருண்மொழியை ஆதரவாகக் கொண்டும், ஆசை மேற்கொண்டும் இது செய்யத்துணிந்தே னுதலால், பெரியோர் என் பிழை பொறுத்தருளக்கடவர்.

இச்சரித்திர முழுதுங் கண்ணிகளுங் கீர்த்தனங்களு மாகவே செய்திருக்கிறது; இடையிடையே விருத்தங்களில்லை. கண்ணிகளெல்லாம் ஒரே தன்மையவாயினும், வேண்டிய வண்ணம் இராகதாளங்களமைத்துப் பாடிக்கொள்ளலாம். சரித்திரத்தில் ஆங்காங்கு அமைத்திருக்கும் சில திரி சொற் களுக்குப் பொருளை அங்கங்கே குறித்தும், சில சந்தர்ப்பங் களில் விரித்துரைக்க வேண்டிய விஷயங்களைச் சரித்திரத்தின் இறுதியிலே ஒருங்கு திரட்டிப் பின்னிணைப்பாகச் சேர்த்து மிருக்கிறேன்.

இப்புத்தகத்தைக் கண்ணுறும் சைவாபிமானிகள் பலரும் தயைசெய்து எல்லாப்பிரதிகளும் விரைவிற் செல வாகும்படி உபகரிப்பார்களாயின், இப்போது சித்தமாயிருக் கிற திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திரக் கீர்த்தனம் முதலிய நூற்களை யச்சிட்டு வெளிப்படுத்த ஏதுவாகும். அடியேன் மேற்கொண்ட முயற்சி யினிது முடியுமாறு திருவருள் கூட்டி முடிக்க. சுபம்! சுபம்!!

சேலம்,
கர, ஆவணி, 1891

இங்ஙனம்,
**சா. சரவணப்பிள்ளை**

ஓம்

திருச்சிற்றம்பலம்

# கண்ணப்பநாயனர் வரலாறு

"குவப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை யிறைச் சிப்பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பா னீக்கித் தூயவாய்க் கலச மாட்ட
உவப்பெருங் குருதி சோர வொருகணை யிடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவுசெய்தார் சாய்க்காடு மேவி னரே."

—௪. ௬௫-அ.

இந்நாயனர் திருத்தோற்றமுறுதற்கு இடனக இருந்த திருநாடு பொத்தப்பி நாடு. ஊர் உடுப்பூர். இவர் தந்தையார் திருப்பெயர் நாகன். தாயார் திருப்பெயர் தத்தை. நாகன் வேடர்குலத்தலைவன். இவன்,

"பெற்றியால் தவமுன் செய்தா னயினும் பிறப்பின் சார்பால்
குற்றமே குணமா வாழ்வான் கொடுமையே தலைநின்றுள்ளான்,
விற்றொழில் விறலின் மிக்கான் வெஞ்சின மடங்கல்
[போல்வான்."

நாகனும் தத்தையும் கருத்தொத்த காதலராய் மனையறம் பேணிவந்தனர். நெடுநாளாகியும் மகப்பேறு பெற்றிலர். அதனல் "பொருவருஞ் சிறப்பின் மிக்கார் இவர்க்கினிப் புதல்வர்ப்பேறே, அரியதென் றெவருங்கூற"லாயினர். மக்கள் வேண்டுஞ் சிறப்பனைத்தும் மன்னுந் தெய்வத்தினை வேண்டிப் பெறுதல் வழிவழி மரபாயிற்று. அம்முறையில் நாகனும் தத்தையும் "முருகலர் அலங்கற் செவ்வேள் முருகவேள் முன்றிற் சென்று பரவுதல் செய்து நாளும் பராய்க்கடன் நெறியில் நின்றார்."

"வாரணச் சேவலோடும் வரிமயிற் குலங்கள் விட்டுத்
தோரண மணிகள் தூக்கிச் சுரும்பணி கதம்பம் நாற்றிப்
போரணி நெடுவே லோற்குப் புகழ்புரி குரவை தூங்கப்
பேரணங் காடல் செய்து பெருவிழா எடுத்தனர்."

"அயிலுடைத் தடக்கைவென்றி அண்ண லாரருளி ஞல்" "அளவில்செய் தவத்திஞலே, பான்மதி உவரி ஈன்ருல் என்ன மகப் பயந்தனர்." எல்லாரும் அளவிலா மகிழ்ச்சி கொண்டனர். நாகன் "கருவரை காளமேகம் ஏந்தியதென்ன" மகனை ஏந்தினன். "அண்ணலைக் கையில் ஏந்தற்கு அருமையால் உரிமைப் பெயரும், திண்ணன் என்று இயம்புமென்றனன்."

மிகவும் சீராட்டி வளர்த்து வந்தனர். பருவந்தோறும் செய்யவேண்டிய சிறப்புக்களை நலமுறச் செய்தனர். ஓராண்டு நிரம்பியது. நடைகற்றனர். தலையில் புலிநகச் சுட்டி சாத்தினர். மார்பினில் பன்றியின் முள்ளரிந்து கோத்த கயிறும், புலிப்பல் தாலியும் அணிந்தனர். அரையில் பாசி மணியும், பலமணிச் சதங்கையும், காசும் இடையிடையே அமைந்த கலன்களும் சேர்ந்த அரைஞாண் கட்டினர். பிள்ளையும் தெருவில் விளையாடல் செய்தது.

பெற்றோர் மகிழும்படி "மழலைத்தீஞ்சொல், வண்ண மென் பவளச் செவ்வாய் குதட்டியே" வளர்ந்தனர். பார்வைப் புலியின் திறந்திருந்த பெரிய வாயைக் குகை என்று எண்ணித் திண்ணஞர் கையை நீட்டினர். தந்தையார் சிறிய பசிய தழையினைக்கொண்டு ஓச்சினர். மைந்தரும் முத்து முத்தாகக் கண்ணீர் சொரிந்தனர். தாயார் கண்டு வாரியெடுத்து மார்போடணைத்து வாய்முத்தங் கொடுத்துக் கண்முத்தினை மாற்றினர்.

உடுக்கையை உருட்டி ஓடினர். கட்டியிருந்த நாய்க் கயிற்றினை அறுத்தனர். வேடச்சிறுமியர் இழைத்த விளையாட்டுப் பொருள்களைக் காலால் சிந்தினர். விளையாட்டுப் பிள்ளைகளோடு ஊர்சுற்றிக் குறும்பு செய்து வந்தனர். இம்முறையாக ஐந்தாண்டு கழிந்தது. ஆருவதாண்டு தொடங்கிற்று.

அக்காலை வேடச்சிறுவருடன சேர்ந்து மலர்க்காவுள் விளை யாடுதலும், குடிகள் மிகுந்துள்ள குறிச்சியைச் சூழ்ந்துள்ள யானைக் கொம்பாலமைந்த உழலை வேலியின் புறத்துள்ள சிறு காட்டினுள் போய் விளையாடுவர்.

முயலின் குட்டி, காட்டுப் பன்றியின் குட்டி, புலிக் குட்டி, செந்நாய்க் குட்டி ஆகியவைகள் விரைவாக ஓடும்போது தாமும் அதைவிட விரைவாக ஓடி அவற்றைப் பிடித்து முற்றத்திற் காணப்படும் மரங்களில் கட்டி வளர்ப்பர். இத்தகைய குட்டிகளும் அளவில்லாதனவாகும்.

பகற்பொழுது கழிந்து அந்திப்பொழுது வந்ததும், குலத்திலுள்ள முதிய குறமகள் வெண் சிறுகடுகின் புகையினைக் காட்டுவள்; உணவு ஊட்டுவள்; தூங்கச் செய்வள்; விடிந்ததும் ஊன் உணவு நல்குவள்; விளையாடச் செய்வள். இம்முறையால் சில ஆண்டுகள் கழிந்தன.

சிலை பயில் பருவமாகிய பன்னிரண்டு ஆண்டு வந்து பொருந்தியது. சிலை - வில் தந்தையாகிய நாகன் மைந்த னை நோக்கினன். தன் தடித்த தோளால் மனமகிழப் புல்லினன். புல்லுதல் - தழுவுதல். புல்லி வில் வித்தை பயிற்றுவிக்க விரும்பினன். அத்துறையில் மிகுந்த பயிற்சி யுடைய முதியரை வரவழைத்தனன். நல்ல நாள் பார்த் தனன். அந்நாளைக் குறித்து எல்லாருக்குஞ் சொல்லி விட்டனன்.

“வேடர்தம் கோமான் நாகன் வென்றிவேள் அருளால் பெற்ற, சேடரின் மிக்க செய்கைத் திண்ணன் வில் பிடிக் கின்றான்” என்று துடி கொட்டிச் சாற்றினர். அந்த மகிழ்ச்சிக்குரிய பேரோசை கேட்டு எல்லாரும் உவந்தனர். உயர்ந்த பக்க மலைகளிலுள்ள மறவர் குலத்துத் தலைவ ரெல்லாரும் நனிமிக மகிழ்ந்தனர்.

பக்கங்களில் உள்ளவர்கள், பக்கத்துக் குடியிருப்பி லுள்ளவர்கள், வேடப் பெண்களும் ஆடவர்களும் உச்சிப் பொழுது கழிந்ததும் தேனுண்டு களிப்பு மிகுந்து வில் விழாவைக் கொண்டாடுவாராயினர். பச்சிலை மாலையும், பல் வகைமலர் மாலையும் சூடிக் கொண்டனர். காசு கட்டிய பெரிய தோலை உடுத்திக்கொண்டனர். பலகறையாலாகிய அணிகள் பூண்டனர். வெட்சிப் பூ முதலாகச் சொல்லப்படுகிற பலவகைக் கண்ணி சூடினர். குற்றமற்ற வில்லாசிரியன் ஏந்தும் அடற்சிலை மருங்கு வந்து சூழ்ந்தனர்.

தொண்டகப் பறையும், கொம்பும், துடிகளும், புல்லாங் குழலும் எட்டுத் திசைகளிலும் நிறைந்து முழங்க அவ் வொளியினுடன் திண்திறல் மறவர் ஆர்ப்பும் வானத்தை இடித்துச் சென்றன. சிறந்த வில்விழா மிகும்படி அக் குறிச்சியை வலமாக வந்தனர். குன்றவர் களிப்புக் கொண்டாடினர். கொடிச்சியர் துணங்கை ஆடினர். மிகுந்த மகிழ்ச்சியுடன் சூரர மகளிரும் ஆடினர். வெற்றிக் குரிய வில்விழா மிகச் சிறப்பாக நடந்தது. இம்முறையாக ஏழு நாள் கொண்டாட்டம் நடந்தது. ஏழாம் நாளில் இரட்டிப்பு மடங்காகக் கொண்டாட்டம் நடந்தது.

கதிரவன் உச்சிக்கு வந்தபொழுது எங்கும் மங்கல வாழ்த்துப் பெருகிற்று. பல இயங்களும் முழங்கின. தங்களுடைய பழைமையான குலத்து வில் வித்தையில் வல்ல திறம் படைத்தவரிடத்து “பொங்கொளிக் கரும்போர் ஏற்றை (திண்ணனரை)ப் பொருசிலை பிடிப்பித்தார்கள்.” கானவர்க்கரிய சிங்கம் விற்றெழில் களத்தில் நண்ணி விதி முறை வணங்கி மேவும், அற்றைநாள் தொடங்கி நாளும் அடற்சிலை ஆண்மை முற்றக் கற்றனர். விற்படை வேற் படை வாட்படை முதலிய எல்லாப் படைகளையும் முற்றக்

கற்றனர். கலைவளர் திங்களேபோல் திண்ணனுருக்குப் பதினாருண்டுப் பருவம் வந்தெய்தியது.

திண்ணனுர் இவ்வண்ணம் நிரம்புநாளில் நாகனுக்கு முதுமையும் தளர்ச்சியும் வந்து பொருந்தின. வேட்டைக்குப் போகமுடியவில்லை. அதனுல் வன விலங்குகள் மல்கின. வேடர்கள் வந்து வேட்டை வினையை மேற்கொள்ள வேண்டினர். நாகன் என்னுடைய மூப்பினுல் முன்புபோல் வேட்டையினில் ஈடுபட முடியவில்லை என்றனன். மேலும், "என் மகனை உங்களுக்கு நாதனுகத்" தருகின்றேன். "எல்லீருங் கைக்கொண்மின்" என்றனன். வேடர்கள் "இரங்கிப் பின் மகிழ்ந்தனர்." தங்கோன் அடியை வணங்கினர். வருமாறு விண்ணப்பித்தனர் :

"இத்தனை காலமும் நினது சிலைக்கீழ்த் தங்கி இனிதுண்டு தீங்கின்றி இருந்தோம், இன்னும் அத்த நினது அருள் வழியே நிற்பதல்லால் அடுத்த நெறி வேறுளதோ" என்றனர். அதுவுமல்லாமல் "மெய்த்தவிறல் திண்ணனையும் மரபில்சால மேம்படவே பெற்றளித்தாய், விளங்கு மேன்மை வைத்த சிலை மைந்தனை ஈண்டழைத்து உங்கள் வரையாட்சி அருள்க என்றனர்."

இவ்வாறு "சிலைமறவர் உரை செய்ய நாகன் தானும் திண்ணனைமுன் கொண்டுவரச் செப்பினன்." "மலை மருவு நெடுங்கானில் கன்னி வேட்டை மகன் போகக் காடுபலி மகிழவூட்ட" எண்ணினன். "தலை மரபின் வழிவந்த தேவராட்டியை அழைமின்" என்ருன். என்றலும், சார்ந்து நின்ருேர் சென்று நரை மூதாட்டிக்கு உரைத்தனர். அவளும் நெடிதுவந்து விருப்பினெடு கடிது வந்தாள்."

காட்டுத் தளிர்களைச் சூடி, மான் கொம்பினுல் செய்த குழையைக் காதிலணிந்தனள். கத்தூரித் திலகமிட்டனள்.

கழுத்தில் சங்கமணி வடமும் பூண்டனள். மரவுரி ஆடையின் மேல் மயிற் பீலியை அணிந்தனள். இக் கோலத்துடன் வந்து பூவும் காட்டு நெல்லும் கலந்த சேடையை நாகனுக்கு நல்கிப் போர் வேடர் கோமாணுகிய அவனைப் போற்றி நின்ருள்.

நாகன் படிமத்தாளை நேர் நோக்கினன். "அன்னையே நீ நிரப்பு நீங்கி நன்றினிதின் இருந்தனையோ" என்று வினவினன். "எனக்கு வேண்டுவன வெல்லாம், அன்று நீ வைத்தபடி பெற்று வாழ்வேன்" என்றனன். பின், அழைத்த பணி என்னென்ருள், அணங்கு சார்ந்தாள்.

நாகன், "கோட்டமில் என் குல மைந்தன் திண்ணன் எங்கள் குலத் தலைமை யான் கொடுப்பக் கொண்டு பூண்டு, பூட்டுறுவெஞ் சிலை வேடர் தம்மைக் காக்கும் பொருப்புரிமை புகுகின்ருன்." "அவனுக்கு என்றும் வேட்டைவினை எனக்கு மேலாக வாய்த்து, வேறு புலங்கவர் வென்றி மேவுமாறு காட்டிலுறை தெய்வங்கள் விரும்பியுண்ணக் காடு பலியூட்" டென்ருன். இத்தகைய மைந்தனைப் பெற்றமையால் நாகன் கவலையில்லாணுயினன்.

தேவராட்டியும் காடு பலிக்கு வேண்டுவன கொண்டு போனுள். தேவராட்டி போன பின்பு திண்ணனுரை அழைத்து வரச் செய்தனன். திண்ணனுரும் வந்து தாதை கழல் வணங்கினர். கட்டித் தழுவிப் புலித்தோல் இருக்கை யில் சேரவைத்தான் நாகன். மேலும் "எனக்கு மேலாய், மன்னு சிலை மலையர் குலக் காவல் பூண்டு மாறெறிந்து மாவேட்டை ஆடி என்றும், உன்னுடைய மரபுரிமை தாங்கு வாய் என்று உடைதோலும் சுரிகையும் கைக்கொடுத்தான் அன்றே." கொடுத்து வேட்டையாட விடையும் கொடுத் தனன்.

வேட்டைக் கோலம் பூண்டனர் திண்ணனர். துணை வர்கள் சூழ நின்றனர். திண்ணனரும் அடல்வாளி தெரிந்து நின்றார். "கானப்பலி நேர் கடவுட் பொறையாட்டியும் சேடை சாத்தி" வாழ்த்தியனுப்பினள். திண்ணனருடன் மீளி வேடர் நீடு கூட்டம் மிக்கு எழுந்தது. காட்டிற் சென்று வேட்டை முறை பிழையாது வேட்டையாடினர். இந் நிலை யில் எல்லாம் அஞ்சும்படி ஒரு பன்றி வலை கிழித்தோடியது.

திண்ணனர் அதனைப் பின் தொடர்ந்தனர். அது தேக்கமரச் செறிவில் திகைத்து நின்றது. திண்ணனரும் "கடுகி மொய்த் தெழுசுடர் விடுசுரிகையை முனைபெற எதிர் உருவிக் குத்தினர்." உடல் முரிபட்டு விழுந்தது பன்றி. எல்லாரும் வேட்டைக் கானில் நின்று விட்டனர். நாணனும் காடனும் மட்டும் பின் தொடர்ந்து வந்தனர். திண்ண னரின் அருஞ்செயல் கண்டு "ஆடவன் கொன்றான் அச்சோ என்றவர் அடியில் வீழ்ந்தார். வீழ்ந்து மொழி கின்றார், இப் பன்றியினைக் காய்ச்சி சற்று நீ அருந்தி யாமும் தின்று தண்ணீர் குடித்து வேட்டைக் காடு குறுகுவோம் என்றார்."

திண்ணனர் தண்ணீர் எங்கே என்று வினவினர். "நின்ற இப்பெரிய தேக்கின் அப்புறஞ் சென்றால் நீண்ட குன்றினுக்கயலே ஓடும் குளிர்ந்த பொன் முகலி என்றான்." காடனைப் பன்றியினைக் கொண்டு உணவாக்கச் சொல்லி விட்டுத் திண்ணனரும் நாணனும் சென்றனர். சென்று "ஆற்றின் தெளிபுனல் இழிந்து சிந்தை தெளிவுறும் திண்ணனர்தாம், களிவரும் மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு, குளிர் வரு நதியூடேகிக் குலவரைச் சாரல் சேர்ந்தார்." அங்கு உண்டாகிய ஒலியினைக் கேட்டு இஃது என் என்றனர் திண்ணனர். ஈக்கள் மொய்த்து ஒலிக்கும் ஒலி என்றான் நாணன்.

"முன்பு செய்தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி, மன் பெருங்காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி, என்பு நெக்குருகி உள்ளத்தெழுபெருவேட்கையோடும்" சென்றனர். சென்று" மாகமார் திருக்காளத்தி மலை எழுந்து கொழுந்தா யுள்ள, ஏகநா யகரைக் கண்டார் எழுந்தபேருவகை அன்பின், வேகமானது மேற்செல்ல மிக்கதோர் விரைவினோடும், மோகமாய் ஓடிச் சென்றார் தழுவினர் மோந்து நின்றார்."

"பச்சிலையும் பூவும் பறித்திட்டு நீரும் வார்த்து, மச்சிது செய்தார் யாரோ என்றனர்" திண்ணனர். நாணன் உன் தந்தையோடு முன்னம் வேட்டையாடி இங்கே வந்தோம் "குளிர்ந்தநீர் இவரையாட்டி, ஒன்றிய இலைப்பூச் சூட்டிஊட்டி முன்பறைந்தோர் பார்ப்பான் அன்றிது செய்தான் இன்றும் அவன் செய்ததாகும் என்றான்." "திண்ணனர் திருக் காளத்தி நாயனர்க்கினிய செய்கை எண்ணிய இவை கொலாம் என்று இது கடைப்பிடித்துக் கொண்டார்." கொண்டு பிரியமாட்டாது வருந்தி அரிதிற் பிரிந்து வந்து இறைச்சியினைக் கோலினிற் கோத்துக் காய்ச்சினர். பல்லினில் அதுக்கிச் சுவை பார்த்தார். கல்லையில் வைத்துக் கொண்டார்.

"ஒரு கையில் வில், ஒரு கையில் இறைச்சிப் போனகம், தூய வாயில் நன்னீர், பள்ளித் தாமம் தலையில் துதைபக் கொண்டார்." வந்து வழிபட்டார் "பழகிய இனிமை பார்த்துப் படைத்த இவ்விறைச்சி சால அழகிது நாயனீரே அமுது செய்தருளும் என்றார்." ஆண்டவனும் அமுதுண் டருளினன். இரவில் வெவ்விலங்குகள் உளவென்றஞ்சித் துயிலாது காத்து நின்றனர். நாணனும் காடனும் தேவு மால் கொண்டான் என்று ஊர் திரும்பினர். ஊரிலிருந்து

நாகன் தேவராட்டியுடன் வந்து வேண்டுவன கூறினன். " தங்கள் குறி வாராமை கண்டு கைவிட்டுச் சென்றனர்."

சிவ கோசரியார் மறுநாள் பூசைக்கு வந்தனர். வெந்த இறைச்சியும் எலும்புங் கண்டு வருந்தினர். வேண்டுந் தூய்மை செய்து வழிபட்டுச் சென்றனர். இவ்வாருகத் திண்ணனுர் வழிபாடு ஆறு நாள் நிகழ்ந்தது. ஏழாம் நாள் சிவகோசரியாருக்குத் திண்ணனுரின் எல்லையிலா அன்பினைக் காட்டச் சிவபெருமானின் கண்ணில் நின்று குருதிநீர் வழியக் காட்டினர். திண்ணனுர் மிக வருந்தி அழுது விழுந்து புரண்டனர். பச்சிலைகள் கொண்டுவந்து பிழிந்து வார்த்தனர். குருதி நிற்கவில்லை. ஊனுக்கு ஊன் என்னும் உணர்வு முன் கண்டனர். தம்முடைய கண்ணையிடந்து இறைவன் கண்ணில் அப்பினர். குருதி நின்று விட்டது. திண்ணனுர் மிக மகிழ்ந்தனர்; ஆடினர் ; பாடினர். மற்றைக் கண்ணினின்றும் குருதி வடிந்தது. திண்ணனுர் கண்டனர். மற்றத் தம் கண்ணையும் இடந்தப்பத் துணிந்தனர். ஆனுல் கண்ணின் அடையாளங் காணும் பொருட்டுத் " தம்பிரான் திருக் கண்ணில் இடக்கால் ஊன்றினர்.'' தம் கண்ணைத் தோண்டத் துணிந்தனர்.

" செங்கண் வெள்விடையின் பாகர் திண்ணனுர் தம்மை யாண்ட
அங்கணர் திருக்காளத்தி அற்புதர் திருக்கை அன்பர்
தங்கண்முன் இடக்குங் கையைத் தடுக்கமூன் றடுக்கு நாக
கங்கணர் அமுத வாக்கு கண்ணப்ப நிற்க என்ற." (கஅ௲)

இதனை " ஞானமா முனிவர் கண்டார், நான்முகன் முதலாயுள்ள வானவர் வளர் பூமாரி பொழிந்தனர் மறைகள் ஆர்ப்ப.

கண்ணிடந்தப்பிய காரணத்தால் " கண்ணப்பர் " என்னும் திருப்பெயர் பெற்றனர். சிவபெருமான் திருவடிப்

பேறெய்தினர். அன்பு பிழம்பாய்த் திரிந்தனர். இத்திரு வரலாற்றின் மெய்க் கருத்துக்கள் கழக வெளியீடு "இலை மலிந்த சருக்கத்"துள் விளக்கப்பட்டுள்ளன. ஆண்டுக் காண்க.

---

"கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்"
—திருத்தொண்டத் தொகை

"தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே
தடஞ்சிலா தலசோபா னத்தால் ஏறி
வாழ்ந்திமையோர் குழாம்நெருங்கு மணிநீள் வாயில்
மருங்கிறைஞ்சி உட்புகுந்து வளர் பொற் கோயில்
சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித்
தொழுதுதலை மேற்கொண்ட செங்கை போற்றி
வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல்
மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்."
(கஉ. சம்பந்தர் - க0உஉ)

அன்புபிழம் பானவருட் கண்ணப்பர் ஆரறிவே
இன்பவுரு வாம்ஞான சம்பந்தர்—முன்பருளால்
ஈரெட்டில் தெய்வமணம் எய்தினர்காண் அவ்வகவை
சீர்த்தமண மாம்பருவம் தேறு.

ப. இராமநாதன்.

திருச்சிற்றம்பலம்

---

உ

நக்கீரதேவ நாயனுர்

அருளிய

# திருக்கண்ணப்பதேவர் திருமறம்

---

திருச்சிற்றம்பலம்

திருக்கண் ணப்பன் செய்தவத் திறத்து
விருப்புடைத் தம்ம விரிகடல் உலகே, பிறந்தது
தேனழித் தூனுண் கானவர் குலத்தே, திரிவது
பொருபுலி குமுறும் பொருப்பிடைக் காடே, வளர்ப்பது
5 செங்கண் நாயொடு தீவகம் பலவே, பயில்வது
வெந்திறற் சிலையொடு வேல்வாள் முதலிய
அந்தமில் படைக்கலம் அவையே யுறைவது
குறைதசை பயின்று குடம்பல நிறைத்துக்
கறைமலி படைக்கலங் கலந்த புல்லொடு
10 பீலி மேய்ந்தவை பிரிந்த வெள்ளிடை
வாலிய புலித்தோல் மறைப்ப வெள்வார்
இரவும் பகலும் இகழா முயற்றியொடு
மடைத்த தேனும் வன்னுய் விட்டுஞ்
சிலைவிடு கணையிலுந் திண்சுரி கையிலும்
15 பலகிளை யவையொடும் பதைப்பப் படுத்துத்
தொல்லுயிர் கொல்லுந் தொழிலே, வடிவே
மறப்புலி கடித்த வன்திரள் முன்கைத்
திறற்படை கிழித்த திண்வரை அகலம்
எயிற்றெண்கு கவர்ந்த இருந்தண் நெற்றி
20 அயிற்கோட் டேனம் படுத்தெழு குறங்கு
செடித்தெழு குஞ்சி செந்நிறத் துறுகண்
கடுத்தெழும் வெவ்வுரை யவ்வாய்க் கருநிறத்
தடுபடை பிரியாக் கொடுவிற லதுவே, மனமே

மிகக்கொலை புரியும் வேட்டையில் உயிர்கள்
25 அகப்படு துயருக் ககனமர்ந் ததுவே, யிதுவக்
கானத் தலைவன் தன்மை கண்ணுதல்
வானத் தலைவன் மலைமகள் பங்கன்
எண்ணரும் பெருமை இமையவர் இறைஞ்சும்
புண்ணிய பாதப் பொற்பார் மலரிணை
30 தாய்க்கட் கன்றெனச் சென்றுகண் டல்லது
வாய்க்கிடும் உண்டி வழக்கறி யானே, அதாஅன்று
கட்டழல் விரித்த கனற்கதிர் உச்சியிற்
சுட்டடி யிடுந்தொறுஞ் சுறுக்கொளுஞ் சுரத்து
முதுமரம் நிரந்த மூட்பயில் வளாகத்
35 தெதிரினங் கடவிய வேட்டையில் விரும்பி
எழுப்பிய விருகத் தினங்களை மறுக்குறத்
தன்நாய் கடித்திரித் திடவடிக் கணைதொடுத்
தெய்து துணித்திடுந் துணித்த விடக்கினை
விறகினிற் கடைந்த வெங்கனற் காய்ச்சி
40 நறுவிய இறைச்சி நல்லது சுவைகண்
டண்ணற் கமிர்தென் றதுவே றமைத்துத்
தண்ணறுஞ் சுனைநீர் தன்வாய்க் குடத்தான்
மஞ்சன மாக முகந்து மலரெனக்
குஞ்சியில் துவர்க்குலை செருகிக் குனிசிலை
45 கடுங்கணை யதனொடும் ஏந்திக் கனல்விழிக்
கருங்குரல் நாய்பின் தொடர யாவரும்
வெருக்கோ ளுற்ற வெங்கடும் பகலில்
திருக்கா ளத்தி எய்திய சிவற்கு
வழிபடக் கடவ மறையோன் முன்னங்
50 துகிலிடைச் சுற்றியில் தூநீ ராட்டி
நல்லன விரைமலர் நறும்புகை விளக்கவி
சொல்லின பரிசிற் சுருங்கலன் பூவும்

பட்ட மாலையுந் தூக்கமும் அலங்கரித்
தர்ச்சனை செய்தாங் கவனடி இறைஞ்சித்
55 திருந்த முத்திரை சிறப்பொடுங் காட்டி
மந்திரம் எண்ணி வலம்இடம் வந்து
விடைகொண் டேகின பின்தொழிற்
பூசனை தன்னைப் புக்கொரு காலில்
தொடுசெருப் படியால் நீக்கி வாயில்
60 இடுபுனல் மேனியி லாட்டித் தன்தலை
தங்கிய துவர்பூ ஏற்றி இறைச்சியில்
பெரிதும் போனகம் படைத்துப் பிரானைக்
கண்டுகண் டுள்ளங் கசிந்து காதலில்
கொண்டதோர் கூத்துமுன் னாடிக் குரைகழல்
65 அன்பொடும் இறுக இறைஞ்சி யாரு
அன்பொடு கானகம் அடையும் அடைந்த
அற்றை அயலினிற் கழித்தாங் கிரவியும்
உதித்த போழ்தத் துள்நீர் மூழ்கி
ஆத ரிக்கும் அந்தணன் வந்து
70 சீரார் சிவற்குத் தான்முன் செய்வதோர்
பொற்புடைப் பூசனை காணான் முடிமிசை
ஏற்றிய துவர்க்கண் டொழியான் மறித்தும்
இவ்வா றர்ச்சனை செய்பவர் யாவர்கொல் என்று
கரந்திருந் தவண்அக் கானவன் வரவினைப்
75 பரந்த காட்டிடைப் பார்த்து நடுக்குற்று
வந்தவன் செய்து போயின வண்ணஞ்
சிந்தையிற் பொருது சேர்விடம் புக்கு
மற்றை நாளும்அவ் வழிபட் டிறைவ
உற்றது கேட்டருள் உன்றனக் கழகா
80 நாள்தொறும் நான்செய் பூசனை தன்னை
ஈங்கொரு வேடுவன்

நாயொடும் புகுந்து மிதித்து முக்கித்
தொடுசெருப் படியால் நீக்கி வாயில்
இடுபுனல் மேனியில் ஆட்டித் தன்தலை
85 தங்கிய சருகிலை யுதிர்த்தோர் இறைச்சியை
நின்திருக் கோயிலில் இட்டுப் போமது
என்றும் உன்றனக் கினிதே எனையுருக்
காணிற் கொன்றிடும் யாவ ராலும்
விலக்குறுங் குணத்தன் அல்லன என்னுந்
90 திருக்குறிப் பென்றவன் சென்ற அல்லிடைக்
கனவில் ஆதரிக்கும் அந்தணன் தனக்குச்
சீரார் திருக்கா ளத்தியுள் அப்பன்
பிறையணி யிலங்கு பின்னுபுன் சடைமுடிக்
கறையணி மிடற்றுக் கனல்மழுத் தடக்கை
95 நெற்றி நாட்டத்து நிறைநீற் ருக
ஒற்றை மால்விடை உமையொடு மருங்கில்
திருவுருக் காட்டி யருளிப் புரிவொடு
பூசனை செய்யுங் குனிசிலை வேடன்
குணமவை யாவன உரிமையிற் சிறந்தனன்
100 மாதவன் என்றுணர் அவனுகந்
தியங்கிய இடம்முனி வனம்அது வேஅவன்
செருப்படி யாவன விருப்புறு துவலே
எழிலவன் வாயது தூய பொற்குடமே
அதனில் தங்குநீர் கங்கையின் புனலே
105 புனற்கிடு மாமணி யவனிரைப் பல்லே
அதற்கிடு தூமலர் அவனது நாவே
உப்புனல் விடும்பொழு துரிஞ்சிய மீசைப்
புன்மயிர் குசையினும் நம்மடிக் கினிதே
அவன்தலை தங்கிய சருகிலை தருப்பையில்
110 பொதிந்த அங்குலி கற்பகத் தலரே

அவனுகந் திட்ட இறைஞ்சி எனக்குநன்
மாதவர் இட்ட நெய்பால் அவியே
இதுவெனக் குனக்கவன்
கலந்ததோர் அன்பு காட்டுவன் நாளை
115 நலந்திகழ் அருச்சனை செய்தாங் கிருஎன்
றிறையவன் எழுந் தருளினன்
அருளலும் மறையவன் அறிவுற் றெழுந்து
மனமிகக் கூசி வைகறைக் குளித்துத்
தான்முன் செய்வதோர்
120 பொற்புடைப் பூசனை புகழ்தரச் செய்து
தோன்ரு வண்ணம் இருந்தன ஞக, இரவியும்
வான்தனி முகட்டில் வந்தழல் சிந்தக்
கடும்பகல் வேட்டையிற் காதலித் தடித்த
உடும்பொடு சிலைகணை யுடைத்தோல் செருப்புத்
125 தொடர்ந்த நாயொடு தோன்றினன் தோன்றலுஞ்
செல்வன் திருக்கா ளத்தியுள் அப்பன்
திருமேனியின் மூன்று கண்ணுய்
ஆங்கொரு கண்ணிலும் உதிரம்
ஒழியா தொழுக இருந்தன ஞகப்
130 பார்த்து நடுக்குற்றுப் பதைத்து மனஞ்சுழன்று
வாய்ப்புனல் சிந்தக் கண்ணீர் அருவக்
கையில் ஊனொடு கணைசிலை சிந்த
நிலம்படப் புரண்டு நெடிதினில் தேறிச்
சிலைக்கொடும் படைகடி தெடுத்துப் படுத்தவர்
135 அடுத்தவிவ் வனத்துளர் எனத்திரிந் தாஅங்
கின்மை கண்டு நன்மையில்
தக்கன மருந்துகள் பிழியவும் பிழிதொறும்
நெக்கிழி குருதியைக் கண்டு நிலைதளர்ந்தென்
அத்தனுக் கடுத்ததென் அத்தனுக் கடுத்ததென்என்

140 றன்பொடுங் கனற்றி
இத்தனை தரிக்கிலன் இதுதனைக் கண்டஎன்
கண்தனை யிடந்து கடவுள்தன் கண்ணுறு
புண்ணில் அப்பியுங் காண்பன் என்றொரு, கண்ணிடைக்
கணையது மடுத்துக் கையில் வாங்கி
145 அணைதர அப்பினன் அப்பலுங் குருதி
நிற்பதொத் துருப்பெறக் கண்டுநெஞ் சுகந்து
மற்றைக் கண்ணிலும்வடிக்கணை மடுத்தனன் மடுத்தலும்
நில்லு கண்ணப்ப நில்லுகண் ணப்பஎன்
அன்புடைத் தோன்றல் நில்லுகண் ணப்பஎன்
150 றின்னுரை யதனொடும் எழிற்சிவ லிங்கந்
தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையால்
அன்னவன் தன்கை யம்பொடும் அகப்படப்
பிடித் தருளினன் அருளலும்
விண்மிசை வானவர்
155 மலர்மழை பொழிந்தனர் வளையொலி படகந்
துந்துபி கறங்கின தொல்சீர் முனிவரும்
ஏத்தினர் இன்னிசை வல்லே
சிவகதி பெற்றனன் திருக்கண் ணப்பனே. (க)

வெண்பா

தத்தையாந் தாய்தந்தை நாகனுந் தன்பிறப்புப்
பொத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனுந்—தித்திக்குந்
திண்ணப்ப னுஞ்சிறுபேர் செய்தவத்தாற் காளத்திக்
கண்ணப்ப னுய்நின்றான் காண். (உ

திருச்சிற்றம்பலம்

———

உ

## கல்லாடதேவ நாயனுர்
அருளிய

# திருகண்ணப்ப தேவர் திருமறம்

---

திருச்சிற்றம்பலம்

பரிவின் தன்மை யுருவுகொண் டணையவன்
போழ்வார் போர்த்த தாழகச் செருப்பினன்
குருதி புலராச் சுரிகை யெஃகம்
அரையிற் கட்டிய வுடைதோற் கச்சையன்
5 தோல்நெடும் பையிற் குறுமயிர் திணித்து
வாரில் வீக்கிய வரிக்கை கட்டியன்
உழுவைக் கூனுகிர் கேழல்வெண் மருப்பு
மாறுபடத் தொடுத்த மாலையுத் தரியன்
நீலப் பீலி நெற்றி சூழ்ந்த
10 கானக் குஞ்சிக் கவடி புல்லினன்
முடுகு நாறு குடிலை யாக்கையன்
வேங்கை வென்று வாகை சூடிய
சங்கரன் தன்னினத் தலைவன் ஓங்கிய
வில்லும் அம்பும் நல்லன தாங்கி
15 ஏற்றுக் கல்வனங் காற்றினில் இயங்கிக்
கணையில் வீழ்த்துக் கருமா வறுத்துக்
கோலின் ஏற்றிக் கொழுந்தீக் காய்ச்சி
நாவில் வைத்த நாட்போ னகமுந்
தன்றலைச் செருகிய தண்பளித் தாமமும்
20 வாய்க்கல சத்து மஞ்சன நீருங்
கொண்டு கானப் பேருறை கண்ணுதல்
முடியிற் பூசை யடியால் நீக்கி
நீங்காக் குணத்துக்

கோசரிக் கன்றவன் நேசங் காட்ட
25 முக்கண் அப்பனுக் கொருகணில் உதிரந்
தக்கி ணத்திடை யிழிதர அக்கணம்
அழுது விழுந்து தொழுதெழுந் தரற்றிப்
புன்மருந் தாற்றப் போகா தென்று
தன்னை மருந்தென்று மலர்க்கண் அப்ப
30 ஒழிந்தது மற்றை யொண்திரு நயனம்
பொழிந்த கண்ணீர்க் கலுழி பொங்க
அற்ற தென்று மற்றக் கண்ணையும்
பகழித் தலையால் அகழ ஆண்டகை
ஒருகை யாலும் இருகை பிடித்து
35 ஒல்லை நம்புண் ணொழிந்தது பாராய்
நல்லை நல்லை எனப்பெறுந்
திருவேட் டுவர்தந் திருவடி கைதொழக்
கருவேட் டுழல்வினைக் காரியங் கெடுமே.

திருச்சிற்றம்பலம்

---

# கண்ணப்ப நாயனுரைப் பற்றிய புகழ்ப் பாடல்கள்

கண்ணப்பன் ஒப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னெப்பில் என்னேயுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னே வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்போன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பி.

— திருவாசகம்.

வேயனேய தோளுமையொர் பாகமது வாகவிடை
[யேறிசடைமேல்
தூயமதி சூடிசுடு காடினட மாடிமலே தன்னே வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனம்
காய்கணேயி னலிடந் தீசனடி கூடுகா ளத்திமலேயே.

—திருஞானசம்பந்தர்.

"நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே
னலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணே யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினுன்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னமென்று கூறுவரே."

— திருத்தொண்டர் திருவந்தாதி.

"வேடரதி பதியுடுப்பூர் வேந்த னுகன்
விளங்கியசேய் திண்ணனுர் கன்னி வேட்டைக்
காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங்
காய்ச்சின்மென் றிடுதசையுங் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச்
சீறுசிவ கோசரியுந் தெளியவிழிப் புண்ணீ
ரோடவொரு கண்ணப்பி யொருகண் ணப்ப
வொழிகவெனு மருள்கொடரு குறகின் றுரே."

—திருத்தொண்டர் புராணசாரம்.

கானிலகு பொத்தப்பி நாடுடுப் பூர்வேடர்
காவலவ ரெனு நாகனுர்
காதலுற் றிடுதிண்ண ஞர்வேட்டை சென்றுதென்
காளத்தி மலைநாத ருக்
கூனிலறு சுவைபெறு மிறைச்சிவாய் மஞ்சனமு
முச்சிமலர் தந்தறு தின
முகந்திடக் கண்டமெய்ச் சிவகோச ரிக்குமன
துறுதுய ரகற்ற விழிநீா
தானிலங் கியவருவி யோடவு மருந்திடத்
தானடங் காத போதுந்
தன்சண் ணிடந்தப்ப நிற்கமறு கண்குருதி
சாயவது நீக்கு போது
மானிலந் தன்னிலென் கண்ணப்ப னெனவுமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனே யிராசலிங் கேசனே சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே.

—திருத்தொண்டர் சதகம்

---

## திருக்காளத்தி புராணம்

மண்ணிடந்து மணிவண்ணன் மருவருஞ்சே வடியார்க்கு
விண்ணிடந்து மறைக்கிழவன் விரவரும்பொன் முடியார்க்குக்
கண்ணிடந்து சாத்தியிரு கண்ணுக்குங் கண்மூன்று
பெண்ணிடங்கொண் டவரருளாற் பெற்றவர்தாள் பெற்றிடு
[வாம்.

—திருக்காளத்தி புராணம்

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கண்ணப்ப சுவாமிகள்

## சரித்திரக் கீர்த்தனம்

### விநாயக தோத்திரம்

சீர்மருவு பத்திநெறி யொழுகியிறை யவனடிசேர்
செல்வம் வாய்ந்த
ஏர்மருவு திருத்தொண்டர் தம்மிலுயர் கண்ணப்பர்
பெரிய காதை
ஏர்மருவு மிசைகலந்து தமிழிலிசைத் திடப்பரம
னீன்ற கொன்றைத்
தார்மருவு புயத்தெங்க ளைங்கரன்பொற் பங்கயத்தாள்
சார்ந்து வாழ்வாம்.

(கீர்த்தனம் - இராகம் – கேதாரம் - ஆதிதாளம்.)

பல்லவி

கஜானனு சரணம் : ஜயஜய
கஜானனு சரணம்.

அநுபல்லவி.

*அஜாதி தேவர்ப ணிந்தி டும்பதனே
அம்பி காபதிமு னந்த ருஞ்சுதனே. கஜா

* அஜன் - பிரமன்.

### சரணங்கள்

க. விக்நநி வாரணனே – * திருமுறை
வெளியிடுங் காரணனே
துக்க வாரிதிக டத்தி டும்பரனே
துஷ்ட கஜமுகனை யட்ட ஐங்கரனே கஜா.

௨. பாசாங் குசதரனே - வரமருள்
பரமத யாகரனே
தேசா ரும்முரு கேசச கோதர
திவ்ய மங்களசொ ரூபம னோகர கஜா.

௩. கண்ணப்ப னர்நல்ல - கதையைக்
கனியும்பண் ணொடுசொல்ல
நண்ணுமெ னக்குத்துணை யாக நீதானே
நாடி வந்தருளு வாயெங் கோமானே. கஜா.

---

# நூல்

## கண்ணிகள்

(இராகம் - பியாகு - மிசிரசாபுதாளம்.)

பூவுலகம்புகழ் பொத்தப்பிநாட்டிற்
பொலியுடுப்பூரினில் வாசன்
மேவுங்கொடுமையெக் காலும்புரிந்திடும்
வேடர்குலத்துக்கு ராசன் (க)

தத்தைநிகர்மொழித் தத்தையெனும்பெயர்ச்
சற்குணியோடுறை யோகன்
எத்திசையும்முள வேடர்பணிந்திடும்
ஏந்தலவன்பெயர் நாகன் (௨)

* 'வார்ந்தருட்கண்' திருமுறைகண்ட புராணம், க௨.

பத்தினியாளொடு கூடிமகிழ்ந்து
பலபகலின்பொடு வாழ்ந்தான்
புத்திரரின்மையி னாலேமனத்தினிற்
பொங்கிய துன்பத்தி லாழ்ந்தான் (௩)

மக்களில்லாதவர்க் கெத்தனைசெல்வம்
மலைமலைபோலிருந் தாலும்
துக்கமல்லாமற் சுகமெனயாவரும்
சொல்லவொண்ணதொருக் காலும் (௪)

மக்கள்புகன்றிடு மிக்கரசங்கொள்
மழலைச்சொலொன்றினைக் கேட்டார்
தக்கபுல்லாங்குழல் வீணையினோசை
தனக்குந்தங்காதினை நீட்டார் (௫)

அரியபுதல்வர் சிறியகையாலே
அளையப்பெருதநற் சோறு
எரியும்விஷம்புழுக் கூட்டமல்லாவிடி
லீனமுறுமலச் சேறு (௬)

சிந்தையிவ்வாறு வருந்தியநாகனுந்
தெய்வம்வழிபடத் தொடுத்தான்
சந்ததங்குன்றுதோ றூடுமுருகர்க்குத்
தக்கபணிசெய அடுத்தான் (௭)

பூசைநடத்தி மயிலொடுசேவல்
பொருந்தவிடுத்தன்பு நீடினன்
தேசுபெறுமுரு கேசனைவேண்டித்
தினமுஞ்சிறப்புக்கொண் டாடினன் (௮)

எந்தைமுருகன் றிருவருளாலே
யினியவோராண்மகப் பெற்றான்
சந்ததியில்லாத துன்பமொழிந்திடச்
சாரும்பெருங்களிப் புற்றான். (௯)

---

(கீர்த்தனம் - இராகம் - காபி - ஆதிதாளம்.)

## பல்லவி

திருவவ தாரஞ்செய் தாரே - எங்கள்
சிவனடிக்கன்பராங் கண்ணப்பனாரே.

## அநுபல்லவி

அருமறைமுநிவர்க ளுளமகிழ்கூர
அகிலபுவனவுயிர் களுங்கதிசேர திரு-

## சரணங்கள்

க. மெய்ம்மையானபத்தி மார்க்கந்துலங்க
பொய்ம்மைமலிந்தபுறச் சமயங்கலங்க திரு-

உ. நாகன்மனத்துயர நீங்கிக்களிக்க
நாடுங்கொடியபாவ மோடியொளிக்க திரு-

ந. வேடர்யாரும்விருந் தொடுகளியாட
விண்ணவர்மலர்மழை சொரிந்துகொண்டாட. திரு-

---

## ஷ கண்ணிகள்

கையிலெடுத்துக் கனத்ததுகண்டிந்தக்
காண்முளை திண்ணனென் றுனே
ஐயனுக்கன்பரா மெம்பெருமானுக்
கதுபெயராச்சுது தானே (கo)

உற்றவணிபல சூடிவளர்க்க
ஒளிமதிபோலவே யோங்கினர்
பெற்றவர்க்கின்பம் பெருகக்குதலைகள்
பேசும்பருவமு நீங்கினர் (கக)

சங்கரனருக்குச் சம்பந்தமாகிய
தன்மையறிந்தவர் போலே

சிங்கம்புலிகளை யானையின்குட்டிகள்
சேரவளர்த்தாரன் பாலே (கஉ)

வேடர்மரபுக் குரியசிலைத்தொழில்
மேவும்பருவத்திற் கற்றனர்
பாடுபெறுமிவர்க் கீடிலையென்று
பரவும்பெரும்புகழ் பெற்றனர் (கங

காட்டில்விலங்கு மலிந்திடர்செய்திடக்
கானவர்நாகனைச் சேர்ந்து
வாட்டுமுதுமை யடைந்தனையாட்சியை
மைந்தனுக்கீயென நேர்ந்து (கச)

வேட்டைபலித்திடத் தெய்வங்கொண்டாளுக்கு
வேண்டும்பலபொருள் கொடுத்து
காட்டுறைதெய்வ மகிழ்ந்திடநற்பலி
காதலூட்டென விடுத்து (கரு)

நாகனுமைந்தனை நோக்கியென்னையநீ
நான்சொல்லும்வார்த்தையைக் கேளு
ஆகந்தளர்ந்திட்டே னாதலாலிவ்வர
சாட்சியைநீயேகொண் டாளு (கசா)

என்றுதன்னாட்சியை மைந்தனுக்கீந்தபோ
தியாருமனத்துயர் விண்டார்
அன்றுநந்திண்ணப்பி ரான்கன்னிவேட்டைக்
கமைந்ததோர்கோலமுங் கொண்டார் (கஎ)

தெய்வக்குறத்தியும் வந்தையர்நெற்றியிற்
சேடையணிபெற அப்பினாள்
ஐயவுன்றந்தையின் தந்தைக்குமின்றுபோ
லானதிலையெனச் செப்பினாள் (கஅ)

* நேர்ந்து - நாகன் உடன்பட்டு.

வேடர்பலரொடு மேகிவனத்தில்
விலங்கினம்யாவையும் மடித்தார்
மூடும்வனவிலங் கால்வருந்துன்ப
முழுமையுநீங்கிட முடித்தார். (கக)

———

(கீர்த்தனம் - இராகம் - பூரிகல்யாணி - ரூபகதாளம்.)

பல்லவி

வேட்டையாடினுர் - திண்ணனுர்
வேட்டையாடினுர்.

அநுபல்லவி

பூட்டும்வில்லம்பு கையிற்பிடித்துக்
காட்டுவிலங்கைக் கலங்கஅடித்து வேட்டை.

சரணங்கள்

க. நெடுமரங்களை முரித்து - வெட்டி
நீண்டவலையை விரித்து
கொடிய வேடர்கள் பார்வை வைத்தொலி
கொடுகூவக் கணையேவிக்
கடுவேகத் தொடுதாவி வேட்டை.

க. நாய்கள்பற்பல கூடி—அங்கே
நாலுபக்கமும் ஓடி
தீய விலங்கை யெழுப்ப அவையுஞ்
சினமுடனே யெதிர்பாய
வருமுனமே உயிர்மாய வேட்டை.

உ. கரடிமான்புலி சிங்கம்—பன்றி
காட்டு*மேதிமா தங்கம்
உருவக் கடமை முதல் விலங்குகள்
உடல்நெரியக் குடல்சரியத்
தொடைமுரியத் திடர்தெரிய வேட்டை.

———

* மேதி - எருமை. மாதங்கம் - யானை.

அப்பொழுதோர்பன்றி தப்பியேயோட
அதனைத்தொடர்ந்துபின் சென்றார்
*எய்ப்பிலாநாணனுங் காடனுநீங்காம
லெந்தைக்குதவியா நின்றார் (௨௦)

அய்யரதைக்கொல்ல நாணனுங்காடனு
மப்பனேயித்தைநா முண்ணுவோம்
வெய்யபசியொழித் தேயிளைப்பாறிநம்
வேட்டைவனத்தினை நண்ணுவோம் (௨௧)

என்றலுநன்றுதண் ணீரெங்கிருப்பதென்
றெந்தையுரைப்பஇக் காடும்
சென்றிடிற்பொன்முகி யாறொருகுன்றினைச்
சேரமணிகொழித் தோடும் (௨௨)

என்றுகுறிப்பொடு நாணனுரைத்திட
ஏந்தலதனையுட் கொண்டு
சென்றரைக்காதத்தி னிற்றிருக்காளத்தி
சேர்ந்தபூஞ்சோலையைக் கண்டு. (௨௩)

---

## திண்ணப்பிரான் பரவசராகநின்று சொல்லுதல்

**(இராகம் - நாதநாமக் கிரியை - ஏகதாளம்)**

கண்ணிகள்

௧. என்னஅதிசய மென்னவோதானே
இன்னஅதிசய மென்றறியேனே.

௨. இந்தமலைகாண ஏகுதேதுன்பம்
எல்லையில்லாது பெருகுதேயின்பம்.

௩. காந்தமிரும்பைக் கவர்வதுபோலே
காணுமென்னெஞ்சை யிழுக்குதுமேலே.

---

* எய்ப்பு - தளர்ச்சி.

௪. தலையிலிருந்த ஒருபெரும்பாரம்
தள்ளினதுபோலத் தோணுதிந்நேரம்.

௫. என்னையறியாமல் நெஞ்சினிலன்பு
இசைகிறதென்ன விளையுமோமுன்பு.

---

நாணனேதோன்று மலையினிலெய்துவோ
நாமெனநல்லது தானே
காணவேசென்றிடி லோநல்லகாட்சியே
காணுவாயெங்கள்கோ மானே (௨௪)

பண்டுநின் றந்தையோ டிந்தமலைவந்து
பார்த்திருக்கின்றன னே
கொண்டவெழிற்குடு மித்தேவரைக்கண்டு
கும்பிடலாகுமென் றனே (௨௫)

அன்னதுகேட்டவர் தேவரிருந்திடும்
அந்தஇடத்துக்கு நேரே
முன்னடவென்று விரைந்துவந்தேபொன்
முகரிக்கரையடைந் தாரே (௨௬)

காடனையங்கெரி மூட்டெனவைத்துக்
கடுகியேதிண்ணனார் சென்றார்
ஓடுநதிகடந் தம்மலையின்னடி
யுற்றனர்பாசத்தை வென்றார் (௨௭)

நாணனுமன்புமுன் னேமலையேற
நடந்தெங்களையன்முன் போயினார்
காணுமுன்னேயருள் நோக்கம்பதியக்
கரையுமன்பேஉரு வாயினார் (௨அ)

வானுலவுந்திருக் காளத்திமாமலை
வாழுமமுதினைக் கண்டார்
தானுறுமன்புமுன் றள்ளவேயோடித்
தழுவினராகந்தங் கொண்டார் (உ௯)

சாரும்புளகமுற் றேவிழிநீர்மழைத்
தாரைபோலேமிகப் பொழிந்தார்
ஆருந்துணையின்றி யேயிருக்கின்றீரே
ஐயரே யென்றுள்ள மழிந்தார். (௩௦)

---

(கீர்த்தனம் - இராகம் - செஞ்சுருட்டி - ஆதிதாளம்)

பல்லவி

தனியேயிருக்கலாமோ — சாமிநீர்
தனியேயிருக்கலாமோ.

அநுபல்லவி

இனியபொருளில்லாத
ஏழைகள் போலே
இந்த மலையின்மேலே — சாமிநீர் தனி.

* சரணங்கள்

௧. காட்டு மிருகங்கள்
கூட்டமா வருமே
கடியதுன் பந்தருமே - சாமிநீர் தனி.

௨. மண்டும்பசிவேளையி
லுண்டிட யாரே
மாமிச மிடுவாரே — சாமிநீர் தனி.

---

* சரணங்களின் இரண்டாமடிகளை முதல்முறை பாடும் போது 'சாமிநீர்' என்பதைச் 'சாமியுமக்கு' என்றும், மடக்கிப் பாடும்போது 'சாமிநீர்' என்றும் சொல்லிக் கொள்க.

௩. பொல்லாதவேடர்க்கே
நல்லதி தரும்
பொழுதெப் படிப்போகும் — சாமிநீர் தனி.

௪. பெரியமலையில்வாழும்
அரியபொன் மலையே
பேச்சுத்து ணையுமிலையே — சாமிநீர் தனி.

———

## * சீகாளத்திநாதரைத் திண்ணனூர் தம்மூர்க்கு வரும்படி அழைத்தல்

**(கீர்த்தனம் - இராகம் - சங்கராபரணம் - ரூபகதாளம்)**

### பல்லவி

வாருங் குடுமித்தேவரே - எம்மூருக்கென்னுடன்
வாருங் குடுமித்தேவரே.

### சரணங்கள்

௧. மலையினிலரி முதலியசெயும்
இடருளத்து ஒருசிறிதிலை வாரும்.

௨. பசிவருமுன முணநலதசை
பலவகையுள ஒருகுறைவிலை வாரும்.

௩. இடுதொழிலெது அதைநொடியினில்
இசையொடுபுரி பவர்பலருளர் வாரும்.

### கண்ணிகள்

†ஈசர்வராமைகண் டிவ்விடந்தானிவர்க்
கிச்சையுள்ளவிடம் போலும்
நேசரிவரைப் பிரிந்திடிலென்னுயிர்
நிற்பதரிதொருக் காலும் (௩௧)

* † பின்னிணைப்பைப் பார்க்க.

இப்படிநைந்தவர் பச்சிலைநீரிவர்க்
கிட்டவராரெனும் போது
துப்புடைநாணனு மப்பரைநோக்கியே
சொல்லுவன்கேளுமென் றீது (௩௨)

முன்னொருபார்ப்பான்வந் திம்மலைத்தேவர்க்கு
முன்னேகுளிர்ந்தநீ ராட்டினன்
துன்னியபூவு மிலையுங்கொணர்ந்திவர்
தூயமுடியினிற் சூட்டினன் (௩௩)

என்னமோவூட்டிக்கை காட்டிமுணுமுணுத்
திட்டதன்பின்புசென் றுனே
அன்னவனேயின்று மிங்கிதுசெய்திருப்
பானெனவேபுகன் றுனே (௩௪)

ஐயர்தமக்கிது வேயினிமைச்செய
லாமெனவேகடைப் பிடித்தார்
வெய்யபசிவரு முன்னமுணவிட
வேண்டுமேயென்றுளந் துடித்தார் (௩௫)

போகுவர்மீள்வர் தழுவுவர்மீளவும்
போவரன்பால்நின்று நோக்குவார்
நாகிளங்கன்றைப் பிரியும்பசுவென
நாடிவிழிப்புனல் போக்குவார் (௩௬)

பின்னொருவாறு துணிந்துநடந்து
பெருமலர்ச்சோலையிற் கூட
மன்னியகாடனு மென்னநீர்தாழ்த்த
வகையெனநாணனுங் *காட (௩௭)

* காட - காடனே.

அங்கிவன்றேவரைக் கண்டுகட்டிக்கொண்
டரியவுடும்பென நின்முன்
இங்குமத்தேவர்க் கிறைச்சிகொண்டேக
இசைந்துதிரும்பின னென்முன் (ருஅ)

திண்ண இதென்னெனுங் காடனைநோக்கிலர்
தீயினிற்பன்றியை வதக்கி
நண்ணுந்தசையைப் பதங்கொளக்காய்ச்சித்தன்
நாவில்வைத்துப்பல்லா லதுக்கி (ருகூ)

நல்லசுவையுள்ள மாமிசந்தன்னை
நலம்பெறக்*கல்லையிற் சேர்த்தார்
அல்லதைவீசி யெறியஇருவரும்
ஐயர்தமையுற்றுப் பார்த்தார் (சO)

தெய்வப்பயித்தியங் கொண்டானிவனெனச்
சிந்தையிலெண்ணிட லாயினர்
மையலுறுந்தேவ ராட்டியுநாகனும்
வந்திடிற்போமெனப் போயினர் (சக)

அண்ணலுமையர்க் கபிஷேகமாட்டிட
ஆற்றுநீர்வாயினில் மொண்டு
தண்ணியபச்சிலை பூவொடுகொய்து
தலைநிறையவைத்துக் கொண்டு (சஉ)

கல்லையில்வைத்த வமுதும்வில்லம்புங்
கரங்களிற்முங்கியே நேரே
வல்லைநடந்தெங்க ளையர்திருமுன்பு
வந்தடைந்தார்திண்ண முரே. (சங)

---

* கல்லை - தொன்னை.

(கீர்த்தனம் - இராகம் - பரசு - சாபுதாளம்)

## பல்லவி

பூசைசெய்தாரே – திண்ணப்பிரான்
பூசைசெய்தாரே.

## அநுபல்லவி

நேசமொடுகாளத்தி மலையெழுமொளியை
நினைப்பவர்க்கினித்திடு நின்மலவெளியை பூசை.

## சரணங்கள்

க. கர்த்தன்முடியிருந்த மலர்களைவெள்ளிக்
கம்பிகட்டுஞ்செருப்புக் காலினுற்றள்ளி பூசை.

உ. வாயிற்கொண்டுவந்த மஞ்சனநீரை
மன்னுமுடியின்மிசை யுமிழ்ந்தரனரை பூசை.

௩. தலையிற்செருகிவந்த பச்சிலைபூவை
தாழ்ந்துமுடியிற்சாத்தி யேயெங்கள்கோவை
பூசை.

ச. சங்கற்பமொன்றினை யுங்குறியாமல்
சங்கரன்பூசையீ தென்றறியாமல் பூசை.

## கண்ணி

இவ்வகைசெய்துபின் னூனமுதத்தை
யெதிரிலிட்டேயைய நீரே
ஒவ்வுஞ்சுவைகொளு நல்லஇறைச்சியி
துண்ணுமெனவுரைத் தாரே. (சச)

---

**கீர்த்தனம் - இராகம் - சௌராஷ்டிரம் - மிசிரசாபுதாளம்**

பல்லவி

உண்ணுமையா — உண்ணுமையா.

அநுபல்லவி

வண்ணமலை மேலேநிதம்
வாழ்மணியே ஊனமுதம் உண்.

சரணங்கள்

க. கொழுத்ததசை யாய்த்திரிந்து
கூரம்பினு லேயரிந்து
பழுத்ததீயிற் பதமாக
பண்ணினது பசிபோக உண்.

உ. பரிவுடன்வா யினிற்சேர்த்து
பல்லினுல துக்கிப்பார்த்து
அரியசுவை முன்னுணர்ந்தேன்
ஆனதையே நான்கொணர்ந்தேன் உண்.

௩. பசிபொறுக்க மாட்டீரென்று
பதைத்திதுகொ ணர்ந்தேனின்று
இசையுநல்ல தாகநானே
இடுகிறேனி தையிவ்வேளை உண்.

———

கண்ணிகள்

இன்னமொழிசொல்லி யூட்டியஅன்ப
ரிருள்வரவையரைச் சேர்ந்து
துன்னும்விலங்கு வருமெனக்காத்தனர்
தூக்கம்விடுத்தன்பு கூர்ந்து (சூடு

செய்யகதிர்வரு முன்னமிறைச்சிக்குத்
திண்ணனுர்காட்டிற்பு குந்தார்
ஐயனைப்பூசித்தி டுஞ்சிவகோசரி
யாருநெறியொடு வந்தார் (சகூ)

வெந்ததசையு மெலும்புங்கண்டையோ
விதிவசமேயென வோடினுர்
இந்தஅநுசிதம் வேடரிழைத்ததென்
றேங்கியழுதுளம் வாடினுர். (சஎ)

---

(கீர்த்தனம் - இராகம் - புன்னுகவராளி - சாபுதாளம்)

பல்லவி

ஐயோநா னென்செய்வேனே - மிக
அநியாய மிதுதானே.

அநுபல்லவி

வையம்புகழ்காளத்தி மலைமிசையுறைநாதா
துய்யநின்றிருமுன்னே தோன்றக்காண்பதுமீதா
ஐயோ.

சரணங்கள்

க. வெந்தமிருக வூனும் - அதனுடனே
மேவுமெலும்பு தானும்
இந்து சேகரனை எம்பெருமான் முனம்
சிந்திக்கிடக்கக்கண்டு தியங்கிறதேமனம் ஐயோ.

உ. காலிற்செருப்பி னேடும் - மிகவுறுமிக்
கடிக்குநாயி னேடும்
ஆலமுண்டருளிய ஐயன்முன்வரலாமோ
ஏலவிதற்குமீச ரிசைந்திருந்திடப்போமோ ஐயோ.

ங. கருணையென்பதைப் பிரிந்து – களவுடனே
கடியகொலைகள் புரிந்து
திரியும்வேடருணவு தின்பதற்கிடமாச்சே
அரியசிவசந்நிதிப் பெருமையிப்படிப்போச்சே ஐயோ.

கண்ணி

சுத்திபுரிந்து திரும்பவும்பொன்முகித்
தூயநதிப்புன லாடினர்
பத்தியொடும்பர மேசனைப்பூசித்துப்
பண்ணொடுதோத்திரம் பாடினர். (சஅ)

---

(இராகம் - தோடி - ரூபகதாளம்)

கண்ணிகள்

க. சிவசிவமஹா தேவசங்கர
தெக்ஷிணகயி லாசனே
தவமுநிவர ரிமையவர்நிதந்
தாள்பணிந்திடு மீசனே.

உ. அயனுமாலுந் தேடிக்காண
அரியஞானசொ ரூபனே
துயருஞ்சனன மரணவேதை
தொலைத்திடும்பிர தாபனே.

ங. *சிலந்தியரவம் யானைபூசனை
செய்யமகிழ்ந்த நாதனே
கலந்தஅன்பறியாத பாவியர்
காணற்கரிய பாதனே.

---

* சிலந்தி, பாம்பு, யானை, இம்மூன்றும் பூசித்த காரணத்தால் "சீகாளத்தி" எனத் தலப் பெயராயிற்று (சீ - சிலந்தி, காளம் - பாம்பு, அத்தி - யானை)

ச. துரியப்பொருளி தென்னவேதந்
துதித்திடும்பரஞ் சோதியே
எரியும்விஷமுண் டமரருக்குயி
ரீந்தகருணை யாதியே.

ரு. அன்னைஞானப்பூங் கோதைக்கினிமை
யளித்திடுமெழி லாகனே
பன்னுமெனது பூசையுங்கொண்டு
பலனளித்திடுந் தியாகனே.

கண்ணிகள்

உள்ளங்கசிந்துகண் ணீர்பெருகத்துதி
யோதியமாமறை வாயினர்
வள்ளல்மலரடி தாழ்ந்துவிடைகொண்டு
வாழும்வனந்தனிற் போயினர் (சகூ)

வேடர்பிரான்பல வூனமுதம்புனல்
வேரிமலரொடு மாசை
நீடவடைந்து முனிவரரிட்டதை
நீக்கிமுடித்தனர் பூசை (ருo)

---

இரண்டாம் நாள்

## திண்ணனர் சீகாளத்தி நாதருக்கு ஊனமுது உபசரித்து ஊட்டல்

(கீர்த்தனம் - இராகம் - சங்கராபரணம் - சாபுதாளம்)

பல்லவி

அமுதுசெய்தருளுமையா — இந்தவூனை
அமுதுசெய்தருளுமையா

## அநுபல்லவி

சமையப் பதஞ்செய்துநான்
தக்கபடி கொணர்ந்தேன் அமுது.

## சரணங்கள்

க. நேற்றுப்படைத்ததிலு நிச்சயமாயிது
ஏற்றமுடையருசி யிசைந்ததாயிருக்குது அமுது.

உ. பன்றிமரைகடமை பலவாமிருகங்கொன்று
துன்றுமிறைச்சிவகை சுகமாயமைத்தேனின்று அமுது.

ந. தேனுமொக்கக்கலந்து தித்திக்குமிதுதானே
நானுங்கண்டேன்சுவை நயந்தேயெம்பெருமானே அமுது.

ச. பட்டஇடமணக்கும் பார்த்தகண்ணுமணக்கும்
தொட்டகையுமணக்கும் சொல்லுநாவுமணக்கும் அமுது.

## கண்ணிகள்

நாடும்பகலினி லூனமுதாட்டுதல்
நாடியேவேட்டை நடத்துவார்
நீடுந்துயிலின்றி யப்பர்திருமுன்பு
நின்றேயிரவைக் கடத்துவார் (ருக)

ஐயரிருந்திட நாகன்பெருந்தேவ
ராட்டியொடுமங்கே யடுத்து
செய்குவதொன்றுமில் லாமலேயூருக்குச்
சென்றனனுசையை விடுத்து (ருஉ)

தன்முறையின்படி வேடர்சிகாமணி
சாமிக்குப்பூசனை செய்வார்

அன்னதைநீக்கிவிட் டேசிவகோசரி
யாரருச்சித்துள்ள னைவார் (ருங)

வேதமுனிவரைந் தாவதுநாளினில்
வித்தகன்பூசனை முடித்து
நீதனேயிந்தஅ நீதமுறுமலே
நீக்குமென்றுர்கண்ணீர் வடித்து (ருச)

---

(கீர்த்தனம் - இராகம் - தன்னியாசி - ரூபகதாளம்)

பல்லவி

இந்தத்தீமை தீர்க்கவேணுமே — மஹாதேவா
இந்தத்தீமை தீர்க்கவேணுமே

அநுபல்லவி

இந்தத்தீமை தீர்க்கவேணும்
என்கவலை போக்கவேணும்
கந்தஜநக சந்த்ரசேகரா கருணுகரா இந்த.

சரணங்கள்

க. இஷ்டமாயிங் கிதைச்செய்ய
இசைந்தவனைக் காணேனய்ய
துஷ்டநிக்ரக சிஷ்டரக்ஷண விஷபக்ஷண இந்த.

உ. தீயவர்க்கு டனேபலம்
சேரக்காட்டு வதேநலம்
தூயவாகம வேதகாரண பரிபூரண இந்த.

ங. இன்னமுந டந்தாலீது
யான்பொறுக்க முடியாது
சொர்ன்னமுகரி தீரவாசனே ஜகதீசனே இந்த.

கண்ணி

அற்றையிரவில் முநிவர் துயிலும்போ
தங்கெழுந்தேவிடை யேறுவார்
மற்றவன்றன்னிலே கேளெனவேதிரு
வாய்மலர்ந்தன்பொடு கூறுவார் (ருரு)

---

(கீர்த்தனம் - இராகம் - சுருட்டி - சாபுதாளம்)

பல்லவி

என்னசொல் லுவேனுனே — அன்பன்
இயல்பையு மக்குத்தானே.

அநுபல்லவி

நிர்ன்னயமாகவே என்னைப்பூசித்துவரும்
நேசரானசிவ கோசரியாரே என்ன.

சரணங்கள்

க. இங்குவந்தவனென்னைப் —பூசிப்பதற்குமுன்னே
யிசைந்தானதுமுடி யின்மீது - *முனம்
தங்கியமலர்களைக் காலிற்செருப்பினுலே
தள்ளிக்கழித்திடுவா னப்போது - எந்தன்
அங்கமுழுதுங்குளிர்ந் தெங்கும்புளகம்பூணும்
அரியகுழந்தையடிப் பரிசம்போலவேதோணும் என்ன.

உ. †ஆசைவெள்ளம்பொங்கி வழிந்ததுபோல்வாயில்
அள்ளிவந்தபுன லதைத்தானே - தன்
மீசைவழியேகங்கை வாசம்புரியுமுடி
மேலேயொழுகவுமிழ்ந் திடுவானே - அது

---

* இதனைப் பின்னிணைப்பிற் காண்க.

† ஆசை வெள்ளம் பொங்கி வழிந்ததுபோல் (வாயிலள்ளி வந்த புனலதை) ஒழுக வுமிழ்ந்திடுவானே எனக் கூட்டுக.

மாசிலாதமந்த்ர வோசையுடனேயாட்டும்
மஞ்சனத்தருப்பைநீர்க் கஞ்சுபங்காகக்காட்டும் என்ன.

ரு. சேரும்புழுக்கடித்து மடங்கியுலர்ந்துமேலே
சிலப்பிக்கூடுகட்டி மிகவாடி - பிறர்
* ஆருந்தொடாதபலமலரும்பச்சிலையுந்தான்
அணிந்துவந்தெனக்குவைப் பான்சூடி - அவை
சாருநன்மலரினுஞ் சேரப்பரிமளிக்கும்
* சண்டீசனுக்குமேலா மண்டுமின்பமளிக்கும் என்ன.

சு. கானகந்தனிலுள்ள மான்முதலியமிரு
கங்களினிறைச்சியைப் பதமாக்கி - முன்னே
தானதன்சுவைகண்டு தேனுமுடன்கலந்து
தந்திடுவான்மென்று குறைநீக்கி - ஐய
நானந்தத்தசைகாண ஆநந்தமிகவாச்சு
நல்லவேள்வியவி செல்லாம்வெறுத்துப்போச்சு என்ன.

எ. இனியசுரத்துடனே முனிவரொடுமமரர்
இசைக்கும்வேததோத்திர வோசை—யிவன்
கனிவொடெனைக்குறித்துப் புனையுமொழிகேட்டபின்
காதினிற்கேட்கவே யிலையாசை - இள
வநிதையர்மொழிவிடர்க் கினிமைவிளைக்கவரும்
வகையினுமதிகமா அகமகிழ்ச்சியைத்தரும் என்ன.

கண்ணிகள்

கோயிலவன்மனஞ் சீலமவன்செயல்
கூறுமவனுரை வேதம்
நேயமவனுரு வேடனவனென
நீநினையாதேஅ நீதம் (ருசு)

* பின்னிணைப்பிற் காண்க.

அன்பரீனாளவங் தங்கேயொளித்திருந்
தாலவன்றன்னிலே தானே
முன்பறிவாயுன் கவலைவிடென்று
மொழிந்தெழுந்தாருமை கோனே (௫ள)

---

## சொப்பனங் கண்ட சிவகோசரியார் திண்ணனார் பெருமை யறியாமைக் கிரங்கல்

(கீர்த்தனம் - இராகம் - உசேனி - சாபுதாளம்)

### பல்லவி

என்னகாரியம்பண்ணினேன் - ஐயையோநான்
என்னகாரியம்பண்ணினேன்.

### அநுபல்லவி

மன்னுமன்பரைஉமை மாதிடம்பிரியாமல்
வைத்தஎங்கள்பரம னடியரென்றறியாமல் என்ன.

### சரணங்கள்

௧. உயர்ந்தபொருள்கள் சிறந்து - விளங்கும்வேதம்
உரைத்ததிருவாய் திறந்து
நயந்துபரமன்புகழ் நல்லடியரைத்தானே
நாடியுணர்ந்திடாமல் நான்பிழையுரைத்தேனே என்ன.

௨. அன்பேமுக்கிய காரணம் - அதனுற்செய்யும்
அரியபூசையே பூரணம்
வன்பாலன்பருயிரை மடிக்கவுந்துணிந்தேனே
மற்றுமொறுக்கவேண்டி வரதனைப்பணித்தேனே என்ன.

௩. * செங்கதிர் முன்னின்ருலும் - அதன்கிரணம்
சேர்ந்தமணலிற் காலும்

தங்கவைப்பரிதுபோல் சங்கரனுக்குநேரே
தானின்றுலுமடியார் தமக்கெதிர்நிற்பார்யாரே என்ன.

கண்ணிகள்

சீலமுநிவரிவ் வாறுவருந்தித்
திகைத்துப்பின்கண்துயில் பொருந்தார்
காலையிற்சென்றுமுன் போலஅருச்சித்துக்
கண்ணுதல்மின்னெளித் திருந்தார் (ருஅ)

முன்னமேசென்றுநல் வேட்டைமுடித்து
முறைப்படிபூசனைக் கூனும்
மன்னும்புனலு மலரொடுகொண்டு
வருகின்றவேடர்பி ரானும் (ருசு)

தீயசகுனங்கள் கண்டுகெட்டேனிவை
செய்திடுமேபெருந் தீது
ஆயநம்மத்தற் கடுத்ததென்னேவென
அஞ்சிமெலிந்தாரப் போது (சூ0)

---

(கீர்த்தனம் - இராகம் - கமாசு - திரிபுடைதாளம்)

பல்லவி

என்னநேர்ந்த தோவறியேன்
ஏதுநேர்ந்த தோவறியேன்

அநுபல்லவி

தன்னந் தனி யேயிருந்த
சாமி யார்மி கவருந்த என்ன.

சரணங்கள்

க. காடைவலி யன்க ருடன்
கழுகொடுகூ கையுந் தானே

நாடிவல மாகிச் செல்ல
நானிந்நேரங் காண்கி றேனே என்ன.

௨. காகநரை யான்செம் போத்து
காணுமயில் கிள்ளை கொக்கு
வேகமாயி டமா குதே
மேவியநங் தேவ ருக்கு என்ன

௩. மொய்த்தஇச்ச குன மெல்லா
முறைமுறைசெய் வது திங்கே
இத்தனைக்கு திரங் காட்டும்
என்னுயிரா மப்பர்க் காங்கே என்ன.

கண்ணிகள்

வேகமாய்வந்திடும் போதவரன்பை
விமலன்முனிவர்க்கு நேரே
வாகொடுகாட்டவோர் கண்ணிலுதிரம்
வழிந்திடக்கொண்டிருந் தாரே (௬௪)

தூரவரும்பொழு தேயதுகண்டுநந்
தோன்றலுமோடியே வந்தார்
சோருங்குருதிநீர் கண்டுமயங்கித்
துடித்துநிலத்தில்வி ழுந்தார் (௬௨)

---

(கீர்த்தனம் - இராகம் - பந்துவராளி - ஆதிதாளம்)

பல்லவி

என்செய்வேன் - இதற்குநான்
என்செய்வேன்

அநுபல்லவி

தஞ்சமாகஎனக் கிங்கிருந்தாருக்குச்
சடிதியிலேபெரும் இடர்வந்துநேர்ந்ததே என்.

## சரணங்கள்

க. போகையிலேசுக மாகவிருந்தவருக்
கோகோ! இவ்வகை யாகியதேயினி என்.

உ. வையந்தனிலெனக்கு நொய்தினிற்கிடைத்தவர்க்
கையோ! இப்படி எய்தியதே துயர் என்.

ந. செப்புமுறுப்புகளில் நுட்பமாகுங்கண்ணில்
அப்பா! மிகுகுரு திப்புனலொழுகுதே என்.

ச. பெருகியொழுகிவரும் குருதிகாணஎந்தன்
அரசேயெனதுள்ள முருகித்தவிக்குதே என்.

ரு. இப்புவியிலெவரு மொப்பிலாதளங்கள்
அப்பனேயுனக்கி தெப்படிநோகுதோ என்.

## கண்ணிகள்

ஓடுவர்மீள்வர் விழுவர்நிலத்தை
யுழுவருருளுவ ரேங்குவார்
வாடியுடலந்தள் ளாடிமயங்கி
மனமழிந்தேயுரை நீங்குவார் (சுந)

பின்னரெழுந்து துடைத்தனர்சோரி
பெருகிடமீளவும் வாடினர்
என்னிதுசெய்தவ ராரெனவெண்ணி
எழுந்துவிற்கொண்டெங்குந் தேடினர் (சுச)

தேடியுமொன்றுங்கா ணாதுவிரைந்து
திரும்பியரனிடம் வந்து
நாடுமலரடி தன்னில்விழுந்து
நடுங்கிக் கதறினர் நைந்து (சுரு)

———

(கீர்த்தனம் - இராகம் - எதுகுலகாம்போதி - ஆதிதாளம்)

## பல்லவி

அப்பனேஐயனே யெப்படியிதுவந்த
தறியேனறியேனே.

## அநுபல்லவி

இப்படியும்வருமோ என்னமாயமோ இது
செப்புவாருமில்லை சிந்தைநொந்தழிகுது அப்பனே.

## சரணங்கள்

க. காட்டிலே திரியுமான்
கோட்டாற் குத்தி விட்டதோ
கரடிபு லிதான்நகம்
உருவும்படி தொட்டதோ
வேட்டையா டுவோரம்பை
யோட்ட அது பட்டதோ
வேறெந்த வகையாலிவ்
வாறு விளைந் திட்டதோ அப்பனே.

உ. இந்த நாட்டுவேடர்
வந்து விளைத்த தீதோ
எண்ணியே அயல்நாட்டார்
நண்ணிப்பு ரிந்த வாதோ
அந்த நாகன்மன
நொந்து செய்த சூதோ
அறியாப்பா வியைக்கண்ட
குறையால்வந் ததுமீதோ அப்பனே.

௫. கொடிய செய்கையிலே
படியுந் தீய வன்பு
கொண்டவ ருக்குமுனைக்
கண்டணைந் திடு முன்பு
கூடிய மனமுருகி
மடியவ ருமே அன்பு
கண்ணி லிதுசெய்யவு
மெண்ணு வாரோ பின்பு அப்பனே;

௬. உகந்து வரும்வழியிற்
றகைந்து பறவை யினம்
உதிரக் குறிகாட்டியே
எதிரே வந்தச குனம்
புகுந்து பலித்ததிது
மிகுந்து வருத்து முனம்
போக்கவென் னுயிரெனிற்
கேட்கவில் லையே மனம் அப்பனே.

## கண்ணிகள்

என்னசெய்தாலிது தீர்ந்திடுமென்னவே
யெந்தையார்சிந்தித்துப் பார்த்தார்
மன்னியபச்சிலை கொண்டுபிழிந்தெங்கள்
வள்ளலார்கண்ணினில் வார்த்தார் (௬௬)

பின்னுமுதிரம் விடாதுபெருகப்
பெருந்தகையாரது கண்டார்
என்னிதுதீர்ந்திடக் கண்டிலமேயென
ஏங்கிப்பெருந்துயர் கொண்டார் (௬௭)

— ... —

(கீர்த்தனம் - இராகம் - சாமா - ரூபகதாளம்)

## பல்லவி

ஏதுசெய்வேன் – ஐயையோநான்
என்னசெய்வேன் - இதனைத்தீர்க்க

## அநுபல்லவி

ஆதரவா யெனக்குக்கிடைத்த
ஐயன்கண்ணிற்புண் ஆறவில்லையே ஏது.

## சரணங்கள்

க. மனமகிழ் பெற்றெடுத்து
வளர்த்தவர்தங் களைவிடுத்து
இனியரிவ ரெனத்தானே
எண்ணியேநா னிருந்தேனே ஏது.

உ. துரும்புபட்டா லும்பெரிதே
துன்பமதைப் பொறுக்கரிதே
பெரும்புணிது மிகநோமே
பின்னேஅசாத் தியமாமே ஏது.

ங. இலைபிழிந்து வார்த்தேனே
இயன்றமட்டும் பார்த்தேனே
நலமதொன்று மதனாலே
நண்ணிலையே யினிமேலே ஏது.

## கண்ணிகள்

வானவர்தம்பெரு மானுறுநோயெந்த
வாறொழிவாமெனச் சோர்ந்தார்
ஊனிலுறுந்துய ரந்தனைநீக்குவ
தூனெனுமூதுரை தேர்ந்தார் (சூஅ)

என்னொருகண்ணையும் பாலேபறித்தெடுத்
தெங்களையன்கண்ணுக் கீடு
துன்னப்பதித்திடிற் றீரவுமாமெனச்
சூழ்ந்துசெய்வார்துணி வோடு (சுசு)

---

## திண்ணப்பிரான் கண்பறித்துச் சாத்தல்

**(இராகம் - சுருட்டி - மிசிரசாபுதாளம்)**

### கண்ணிகள்

க. திண்ணப்பிரானந்தி வண்ணப்பிரானெதிர்
சேர்ந்து – மகிழ் - கூர்ந்து
செய்யசரத்தினைக் கையகந்தன்னிலே
கொண்டு - பயம் - விண்டு.

உ. தன்னொருகண்ணினிற் பின்னமுறுமலே
விடுத்துக் - களைந் - தெடுத்து
சங்கரன்செம்புனல் பொங்கும்வலக்கண்ணிற்
சேர்த்தார் – உற்றுப் - பார்த்தார்.

ந. வழிந்தகுருதி யொழிந்திடக்கண்டனர்
தூயர் - சிவ - நேயர்
வானிலெழுந்துதன் மேனிமறந்துமுன்
தாவினார் - மிகக் - கூவினார்,

ச. நன்றுசெய்தேன்செய்தே னென்றுபுகன்று
துதித்தார் - தன்னை - மதித்தார்
நல்லதன்கண்ணிலொன் றில்லையேயென்பதை
நினையார் - பழி - புனையார்.

ரு. உந்துங்களிப்புறு சிந்தையுடனேநின்
றாடினார் – சுற்றி - ஓடினார்

ஓங்குமலையென வீங்கும்புஜங்கொட்டி
நின்றார் - வினை - வென்றார்.

---

## திண்ணப்பிரான் மருந்தைப் புகழ்தல்

### பல்லவி

* நல்லமருந்து கண்டேன்—நானே
நல்லமருந்து கண்டேன்

### அநுபல்லவி

எல்லாமருந்தையும் பார்க்குமொருமருந்து
எங்கள்தேவர்புண்ணைத் தீர்க்கும்மருந்து நல்ல.

### சரணங்கள்

௧. இதுவரையுமொருவர் காணுவருமருந்து
இசைந்ததனக்குத்தானே தோணுவொருமருந்து நல்ல.

௨. நல்லவழியினிலே செல்லவிடுமருந்து
நாடுமெவரிடத்து மேவியிடுமருந்து நல்ல,

௩. இருளுக்கிருளாயொளிக் கொளியாயுள்ளமருந்து
என்னைப்பிரிந்தென்னுயி ரீந்தகள்ளமருந்து நல்ல

### கண்ணிகள்

பின்னையுமன்பர் நலத்தினைக்காட்டப்
பிறைமதிசூடிய ஈசர்
தன்னிடக்கண்ணிலும் புண்ணீர்விடுத்திடத்
தானதுகண்டனர் நேசர் (௭௦)

* வெய்யநரகில் நெடும்பகலுற்றபின்
மேயசுவர்க்கத்துட் புகுந்தார்

---

* பின்னிணைப்பைப் பார்க்க.

* ஒய்யெனமீள நரகில்விழுந்ததை
யொத்துமனத்துயர் மிகுந்தார் (எக)

---

(கீர்த்தனம் - இராகம் - அமீர்கல்யாணி - சாபுதாளம்)

பல்லவி

இந்தவினைக்கென்ன செய்வேன்
எந்தவிதத்தினி லேழையேனுய்வேன்

அநுபல்லவி

எந்தனையருக்குமுன் வந்தசங்கடமே
ஏகாமலிப்படிச் செய்வதேயடமே இந்த.

சரணங்கள்

க. வந்ததொழிந்ததென மகிழ்ந்தேனேநெஞ்சம்
எந்தவழியோபின்னும் இசைந்ததேவஞ்சம் இந்த.

உ. அந்தக்கண்ணேய்வழி யடைத்ததனாலே
இந்தக்கண்வழியாக எழுந்ததோமேலே இந்த.

௩. மண்டுங்குருதிகண்டு மயங்குதேயாவி
எண்டிசையிலுமுண்டோ என்னைப்போல்பாவி இந்த.

௪. தீயவேளையிலிங்கே சேர்ந்தேனன்போலும்
போயினதுந்திரும்பிப் புகுந்ததேமேலும் இந்த.

கண்ணி

சஞ்சலமிஞ்சிய திண்ணப்பிரானும்
தமக்குட்சிறிதுளந் தேறி
கொஞ்சமுநெஞ்சினி லஞ்சிடேனென்று
கூறலுற்றார்துயர் மாறி (எஉ)

---

* ஒய்யென - விரைவுக்குறிப்பு.

(கீர்த்தனம் - இராகம் - அடாணா - ஆதிதாளம்)

### பல்லவி

அஞ்சுவேனே இனிநான்—இதனுக்காக
அஞ்சுவேனே இனிநான்

### அநுபல்லவி

வஞ்சகமாகஇன்னும் மிஞ்சியேவந்தாலும்
கொஞ்சமாகிலுமென் நெஞ்சுகலங்கியே அஞ்சு.

### சரணங்கள்

க. பண்டுவந்தபொழுதி லண்டிடாமற்செய்யக்
கொண்டதாகியகை கண்டமருந்திருக்க அஞ்சு.

உ. இருந்தவிடந்தனிலே வருந்திடாமற்கொள்ள
மருந்தசுலபமாகப் பொருந்தியிருந்திடவும் அஞ்சு.

௩. கூர்த்தஅம்பினாலே பேர்த்துமற்றொருகண்ணும்
தீர்த்தன்விழியிலப்பித் தீர்த்திதோவிடுகிறேன் அஞ்சு.

---

## திண்ணனார் மற்றொரு கண்ணும் பறிக்கத் தொடங்குதல்

(கீர்த்தனம் - இராகம் - செஞ்சுருட்டி - ரூபகதாளம்)

### பல்லவி

மற்றொருகண்ணும் பேர்த்துச்சாத்த
மன்னர்தொடங்கினாரே.

### அநுபல்லவி

உற்றதைமுன்னம் ஊனைக்கொண்டே
முற்றும்போக்கிய முறைமைகண்டே. மற்று.

## சரணங்கள்

க. இருக்குமொன்றையும் பறித்திடிலினி
இரண்டு கண்ணுமில் லாமல்
தரைக்குளெப்படிச் சரிக்கலாமெனச்
சற்றுஞ் சிந்தனையுற்றி டாமல் மற்று.

உ. *மன்னுமசுரன் றன்னைமுடிக்க
வகுத்த ஆழி பெறவே
தன்னொருகண்ணை முன்னம்பறித்துச்
சாத்துமாயனு நாண முறவே மற்று.

ங. அப்பும்போதிடந் தப்பிடாமல்
அறிய வேணு மென்றே
எய்ப்பிலாதென் னப்பர்கண்ணில்
இடதுகாலை யூன்றி நின்றே மற்று.

## கண்ணி

வைக்குங் குறிக்கிடக் காலினை நாதர்
மலர்க்கண்ணி லூன்றிய நேசர்
தைத்திடுங்கோலினைக் கண்ணிலே நாட்டத்
தரித்திலர்காளத்தி வாசர் (எரு)

---

## *சிவபெருமான் அடியவர் துன்பம் பொருரெனல்

(கீர்த்தனம் - இராகம் - நாதநாமக்கிரியை - ஆதிதாளம்)

## பல்லவி

தரிப்பாரோ தரிப்பாரோ—ஒருக்ஷணமாகிலுமினி
தரிப்பாரோ தரிப்பாரோ

---

* பின்னிணைப்பைப் பார்க்க.

## அநுபல்லவி

விருப்பும்வெறுப்புமடை யாததம்மடியார்
மெலிவுறுதருளு நதிமதிமுடியார் தரி.

## சரணங்கள்

௧. போற்றிப்பூசனைக ளாற்றியபாலனை
ஏற்றுவந்தகொடுங் கூற்றனையுதைத்தவர் தரி.

௨. *கலைதனையொலித்திடுஞ் சிலையினிலேதமது
தலையைமோதுமன்பர் நிலைதரியாதவர் தரி

௩. †வாட்டமடைந்ததொண்டர்ஊட்டியரியவாளைப்
பூட்டும்பொழுதினிற்கை நீட்டித்தடுத்தவையர் தரி.

௪. அன்பரியல்பையுல கின்புறவுணர்த்தவே
பின்புபொறுத்தவையர் பின்புமவர்துயரைத் தரி.

௫. பூதலத்தோரன்பர்மீது குறையொன்றுஞ்சொல்
லாதுபொறுத்தளங்கள் நாதனுரினிமேலும் தரி.

௬. சரமொடசரமெனப் பரவுமுயிர்மேல்வைத்த
கருணையேதமது திருவுருவானவர் தரி.

## கண்ணி

‡சொல்லறிகங்கணக் கையினைநீட்டிநந்
தோன்றல்கரங்களைத் தடுத்தார்
நில்லுகண்ணப்ப எனுந்திருவாக்குக்கை
நீட்டுமுன்மும்முறை கொடுத்தார் (௭௪)

———

*திருக்குறிப்புத்தொண்ட நாயனார். கலைதனை யொலித்திடுஞ் சிலை - ஆடை தோய்க்குங் கல். †அரிவாட்டாய நாயனார். ஊட்டி - மிடறு. ‡சொல்லறிகங்கணம் - ஆதிசேட கங்கணம்.

(கீர்த்தனம் - இராகம் - பூரிகல்யாணி - ரூபகதாளம்)

## பல்லவி

* நில்லு கண்ணப்பா - நில்லு - நில்லு

## அநுபல்லவி

நல்லகண்ணைப் பறித்திடாதே
நமக்குமனத்திற் றுயர்கொடாதே நில்லு

## சரணங்கள்

௧. புண்ணிருந்ததும் அண்ணலேயினிப்
போச்சுபோச்சு போச்சுபோச்சு நில்லு

௨. புண்ணியாவொரு கண்ணைத்தீர்த்ததே
போதும்போதும் போதும்போதும் நில்லு

௩. சொஸ்தமானதை யெத்தாலேக்குவாய்
சொல்லுசொல்லு சொல்லுசொல்லு நில்லு

௪. இதையும்பேர்த்திடி லுதவியாரெனக்
கெண்ணுஎண்ணு எண்ணுஎண்ணு நில்லு

## கண்ணிகள்

திண்ணப்பிரானன்று கண்ணப்பரென்று
சிறக்குந்திருப்பெயர் பெற்றார்
விண்ணப்பிராமதி வேணியனார்வலம்
மேவிச்சிவானந்த முற்றார் (௭௫)

தொண்டரியல்பை மறைந்தஞ்சிநின்றஅத்
தூயமுனிவரும் பார்த்தார்
கண்டவரிபிர மாதியரார்ப்பொடு
கற்பகமாமலர் தூர்த்தார் (௭௬

---

* பின்னிணைப்பைப் பார்க்க.

வாழிசிவாகமம் வாழிமுதுமறை
வாழிசிவநிலத் தேவர்
வாழிசமய குரவருமாபதி
வாழியறுபத்து மூவர். (௭௭)

---

கண்ணப்ப சுவாமிகள்

சரித்திரக் கீர்த்தனம்

முற்றிற்று.

---

ஆக - விருத்தம்—௧. கீர்த்தனம் — ௨௨. கண்ணிகள் — ௬.
தனிக்கண்ணிகள் - ௭௭.

---

அருண்மொழித்தேவர் திருவடி வாழ்க

திருச்சிற்றம்பலம்

---

# பின்னிணைப்பு

---

## பக்கம் - ௧0

"சீகாளத்தி நாதரைத் திண்ணனார் தம்மூர்க்கு வரும்படி அழைத்தல்."

இவ்வாறு, சீகாளத்தி புராணம் கண்ணப்ப சருக்கத்தில், "சாமி நீதனியே யீண்டுத் தங்குதல் தரிக்கலாற்றேன் – ஏம நல்லுடுப் பூர்க்கின்னே யென்னோடும் வருதல் வேண்டும்." என்று கூறப்பட்டிருக்கிறது. இப்படியழைத்தாரென்பது, கேட்போர்க்கு ஒருவகையின்பம் விளைப்பதால் இங்கே தழுவிச் சொல்லப்பட்டது. கீழ்வருவதும் இப்படியே.

"ஈசர் வராமை கண்டு......காலும்."

மேற் சொல்லிய சருக்கத்தில் "மறுமொழி யிறைவனென்றும் வழங்கலனிருப்ப மீளி – யிறை திருவுளத்திலெண்ண மிவ்வயினிருத்தல் போலும் - சிறியனேனினியித் தெய்வசிகாமணி தன்னை நீங்கி - யுறுவனோ வுயிரினோடென் றுரைத்தனனின் றுணங்கே" என்பதனாற் காண்க.

## பக்கம் - ௨0

"முனந்தங்கிய மலர்களை."

சிவபெருமான் சிவகோசரியாரிடத்து, "நீ சாத்திய மலர்களைக் காற்செருப்பினாலே தள்ளுவான்" என்று கூறியருளினால், ஒருவாறு நிந்தை போலத் தோன்றுதலின்,

அவ்வாறு கூறுது முனந்தங்கிய மலர்களை யென்றருளிச் செய்தனர்.

பக்கம்-உக

"ஆருந் தொடாத பல மலரும் பச்சிலையும்."

இது, எவருங்கொள்ள விரும்பாத மலரும் பச்சிலையு மென்று பொருள் படுவதன்றி, ஒருவர் தொட்டதை நமதன் பன் ஆசாரப் பழுதென்று தொடமாட்டா னென்று கூறுவது போலத் தொனிப்பதுங் காண்க. பல என்பதைப் பச்சிலைக்குங் கூட்டுக.

"சண்டேசனுக்கு மேலாமண்டு மின்பமளிக்கும்."

சண்டேசன் நாமணிந்ததைத் தானணியுமுரிமை பூண்டானுதலால், நமதன்பன் சாத்திய பத்திர புட்பங்கள் சண்டேசனுக்குக் கழிபெருமகிழ்ச்சி தருவன வாயின. இவ்வாக் கியத்துக்கு இவ்வாறன்றி, சண்டேசனுக்கும் மேலாமண்டும் இன்பம் (எமக்கு) அளிக்கு மென்று கொண்டு, நாமணிந் ததைத் தானணியுங்கால் சண்டேசனுக்கு எத்துணைப் பெரு மகிழ்ச்சி யுளதாமோ, அதினுமதிக மகிழ்ச்சி யெமக்குண்டா கின்றது; நம் அன்பன் தானணிந்ததை நாமணியப் பெறு தலால், என்றும் பொருள் படுதல் காண்க. பின்னையது நின்மாலியப் பெருமையும், அதனைப் பெறுங்காற் சண்டேசர் திருவுள்ள நிலைமையும் விளக்கியவாறு.

பக்கம் - உஉ

"செங்கதிர் முன்னின்ருலும்."

இச்சரணக்கருத்தை "ஈசனெதிர் நின்ருலு மீசனருள் பெற்றுயர்ந்த – நேசரெதிர் நிற்ப தரிதாமால் - தேசுபெறு – செங்கதிர்முன் னின்ருலுஞ் செங்கதிர வன்கிரணந் - தங்கு மணல் நிற்பரிதே தான்" என்பதனுலும், "மறையினை நிந்தித் தாலு மறைமுதற் பொருளாயுள்ள, கறைமிடற்றிறை வன்றன்னைக் கருத்துற நிந்தித்தாலும், இறையவனடியார் தம்மை

நிந்தித்தல் கூடா தென்றும், அறைதரு கழுவாயிந்த நிந்தனைக்ககிலத் தின்றே" என்பதனுலுங் காண்க.

(கழுவாய் என்பது பிராயச்சித்தம்)

பக்கம் - ௩௦

"நல்ல மருந்து கண்டேன்"

இக்கீர்த்தனத்தில் மருந்தென்று கூறியவை கண்ணையே குறிப்பன. 'இருவிழிகளுலகறிந்துந் தமையறியா' வாதலால் (தனக்குத்தானே தோணு வொரு மருந்து) என்றும், கண், இருளோடு கூடியவழி யிருளாயும், ஒளியோடு கூடியவழி ஒளியாயும், நிற்பதாதலால் (இருளுக் கிருளா யொளிக் கொளியாயுள்ள மருந்து) என்றும், கண், தம்மிடத் துள்ளவரையுந் தேவர்க்கு வந்த புண் தீராதிருந்து தம் முயிரையும் போக்குவதாகிய பெருந்துயர் விளைத்ததாலும், அதனைப் பறித்துச் சாத்திய பின்னரே அப்புண் தீர்ந்து தம்முயிர் நிலைத்தபடியாலும், (என்னைப் பிரிந்தென்னுயி ரீந்த கள்ள மருந்து) என்றுங் கூறினர். நன்மை செய்யவல்ல அக்கண் தம்மைப் பிரிந்த பின்பு தமக்கு நன்மை செய்தமை யால், (கள்ள மருந்து) என்றனர். இவ்வுபாயந் தமக்குத் தோன்றிச் செய்யாதிருப்பின், தம் உயிர் நீங்கியே இருக்கு மென்பது கருத்து. மற்றையவை வெளிப்படை.

திண்ணப்பிரான் தம் தேவரையே யாவரினும் பெரியா ரென்று கருதின ராதலால், அவர்க்கு வந்த புண்ணைத் தீர்த்த மருந்தை (எங்கள் தேவர் புண்ணைத் தீர்க்கும்) "பெரு மருந்து" என்றாரென்க.

"வெய்ய நரகில்......மிகுந்தார்."

இக்கண்ணியின் கருத்தையும் கண்ணப்பசருக்கத்திற் காண்க. இதை ஒட்டியே அடுத்த கீர்த்தனமும் செய்யப் பட்டது. பின்னும், துன்புற்று வருந்தினுரென்றமையால், நாயனரது அளவிறந்த அன்பின் பெருமை வெளிப்படு கின்றது.

### பக்கம் - ௩௩

"மன்னுமசுரன்......நாணமுறவே."

சலந்தராசுரனை மடிக்கச் சிவபெருமான் றமது திருவடியால் அமைத்த சக்கரத்தை, விஷ்ணு கண்ணைப்பறித்துச் சாத்திப் பெற்றார். இதனை - 'தடமலராயிரங்கள் குறைவொன்றதாக நிறைவென்று தன் கணதனால், உடன் வழிபாடு செய்த திருமாலை யெந்தை பெருமானுவந்து மிகவுஞ், சுடரடியால் முயன்று சுழல் வித்தரக்க னிதயம் பிளந்த கொடுமை, யடல் வலி யாழி யாழியவனுக் களித்தவவனமக் கொர்சரணே' என்னுந் தேவாரத்தாற் காண்க. திருமால் சக்கரம் பெற வேண்டியொரு கண்ணைப் பறித்தனர். நம் நாயனார் அவ்வாறொன்றையும் வேண்டிச் செய்திலர். ஆகவே யது காமியமும், இது நிஷ்காமியமுமாயிற்று. ஆகையால், நாயனார் ஒருகண்ணைப் பறித்தபோதே நாண வேண்டியவராகிய அத்திருமால் இவரு நம்மைப் போலொரு கண்ணைத் தானே பறித்தாரென்ற அம்மாத்திரத்திலே திருப்தியடைந்தவராகி நாயனார் மற்றொரு கண்ணையும் போக்கத் தொடங்கிய காலத்திற் பெருநாணமுற் றாரென்க.

"சிவபெருமானடியவர் துன்பம் பொறாரெனல்."

இத்தலைப்பின் கீழிருக்குங் கீர்த்தனம், புராணிகர் கூற்றாய்க் கேட்போர்களுக்குச் சிவபெருமானது அளவிறந்த கருணைத் திறத்தைச் சமயோசிதமா யெடுத்துணர்த்தி, 'திண்ணனார் கண்ணிலூன்றத்தரித்திலர் தேவ தேவர்' என்னும் பெரியபுராணக் கருத்தை விரித்துரைப்பது. அடியவர் விருப்பு வெறுப்பற்றவராயினும், அவர்க்கொரு சிறிது இடர் வரினும் சிவபிரான் தரியாரென்றும், மார்க்கண்டேயர் முதலினோர் விஷயத்தில் தரித்தில ரென்றும் முதற் கண்ணைப் போக்கத் தொடங்கிய போதே அன்பர் திறம் வெளிப்படலால் தடுத்திருக்கலாமே யெனின், "இவ்வன்பர் ஒரு கண்ணைப் பேர்த்ததனாலேயே உயிர் போய்விடுமோ? மற்றையரைப்போ லுயிர் துறக்கத் துணிந்தனரோ?

ஒருவன் உயிரினைப் பிரிய நேர்ந்தாலுங் கண்ணைப் பிரியப் பொருனென்றுலோ, இரண்டு கண்ணையும் பேர்த்துச் சாத்தினரோ? உண்மையன் பென்பது யாண்டுஞ் சுவயப் பிரயோசனங் கருதாத திறமல்லவோ?'' என்று சிலர் குறை கூறினுங் கூறுவாராதலால், அன்பர் மற்றொரு கண்ணைப் பேர்க்கத் தொடங்கும் வரையும் பொறுத்தருளி, அவர் பெருமையை யாவர்க்கும் ஒப்ப முடிந்த துணிவாக்கியவுடனே தரித்திலரென்றும், சராசரவுயிர்கள்மீது கொண்ட அருளே திருவடிவமானவராகலின் தரிப்பாரோ வென்றும், உரைத்துக் கொள்க.

## பக்கம் - ௩௫

"நில்லு கண்ணப்பா – நில்லு நில்லு.''

சீகாளத்தியப்பர் 'நில்லு கண்ணப்பா' என்ற திருவாக்குடன் திருக்கரம் நீட்டித் தடுத்தருளவும் நில்லாது அம்பைக் கண்ணிலே யூன்றுகின்றுர் நாயனுர். ஏனெனில் (கண்ணப்பிய காரணத்தாற் பரமேசனிட்டழைத்த) கண்ணப்ப நாமத்தால் தம்மை யாருமழைக்கப் பெருதவராகையாலும்; தாம் மேற்கொண்ட முயற்சியிலே ஊக்கமுடையரா யிருந்தமை யாலுமென்க. சிவபிரான், அன்ப, நல்லகண்ணைப் பறித்திடாமலும் அதனுல் நமக்கு மனத்துயர் விளைக்காமலும் நில்லு' என்று தடுத்தருளினர். நாயனுர், சுவாமீ! உமக்காகத்தான் பறிக்கிறேன் தேவர்க்கு ஒரு துன்பமுமில்லாம லிக்கணமே செய்கிறேனென்று பின்னும் ஊன்றினர். சிவபிரான் புண்ணிருந்தது போச்சு என்றனர். நாயனுர், அஃதெவ்வாறு பரிகாரஞ் செய்யுமுன் போகும்? என்று பின்னும் ஊன்றினர். சிவபிரான், ஒரு கண்ணைத் தீர்த்ததே போதும் என்றனர். (இதனுல் உனக்கும் நமக்கும் ஒரு கண் நன்ருயிருக்கட்டும் என்பது கருத்து. இதற்கு, உன்னொரு கண்ணைத் தீர்த்ததே உன்னன்பைக் காட்டுவதற்குப் போதும் என்று உள்ளுறைப் பொருளுங் காண்க.) நாயனுர், ஒன்றுக்குப் பரிகாரஞ் செய்து மற்றென்றுக்குச் செய்யாது விடுவது தகுதியன்று.

அதனையும் வாசியாக்கிப் பார்ப்பேனென்று பின்னும் ஊன்றினர். (நாயனுர் தமக்குக் கண்ணிரண்டு மில்லையாய் விடுமேயென்பதைக் கருதினுரில்லை.) மேலே சிவபிரான் சொஸ்தமானதை யெதனுற் காண்பா யென்றனர். நாயனுர், முன்னேயனுபவமாகக் கண்டிருப்பதால் தீர்ந்தே விடுமென்று பின்னும் ஊன்றினர். பின்பு சிவபிரான், அன்பனே, நீ யிதையும் பேர்த்திடிலுதவியாரெனக்கு; இதை யெண்ணியாகிலும் நில்லு என்றருளினர். அதற்கு நாயனுர் தடைப்பட்டு நின்ருர். தடைப்பட்டது தம்பயன் கருதியன்று என்பது காண்க.

பின்னிணைப்பு

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்



